# Indian Celltheraphy Institute

(Affiliated to Indian Board of Alternative Medicines ● Approved by Bharat Sevak Samaj - Run by Govt. of India)

## மாற்று மருத்துவ டாக்டர் பட்டப் படிப்பு (Degree)

**MD (AM)**
Doctor of Medicine

குறைந்த பட்சம் டிகிரி முடித்தவர்கள் அல்லது 10 ஆண்டு களுக்கு மேல் மருத்துவ முறைகளில் அனுபவம் பெற்ற வர்கள் இந்த முதுநிலை டாக்டர் படிப்பை படிக்கலாம்.

**BASM**
Bachelor of Alternative System of Medicine

பட்டப்படிப்பு குறைந்தவர்கள், +2 தேர்ச்சி பெற்றவர்கள் மட்டும் இந்த இளநிலை டாக்டர் படிப்பை படிக்கலாம்.

**RMP**
Registered Medical Practitioner

மேற்கண்ட முதுநிலை / இளநிலை டாக்டர் படிப்பு படித்து முடித்தவர்கள் மருத்துவமனை நடத்துவதற்காக இந்தச் சான்றிதழ் (IBAM) நிறுவனத்தினரால் வழங்கப்படும். இதற்கு கட்டணம் ஏதும் இல்லை.

## மாற்று மருத்துவ டாக்டர் பட்டயப் படிப்பு (Diploma)

**DCT**

டிப்ளமோ இன் செல்தெரபி 6 மாத பட்டய படிப்பு தகுதி S.S.L.C. / 10ம் வகுப்பு / அதற்கு இணையான படிப்புகளில் தேர்ச்சி.

**DHM**

டிப்ளமோ இன் ஹெர்பல் மெடிசன் 1 வருட பட்டய படிப்பு. தகுதி S.S.L.C. / 10ம் வகுப்பு / அதற்கு இணையான படிப்புகளில் தேர்ச்சி.

**DAMT**

டிப்ளமோ இன் ஆயுர்வேத மசாஜ் & டிரீட்மெண்ட் தகுதி S.S.L.C. / 10ம் வகுப்பு / அதற்கு இணையான படிப்புகளில் தேர்ச்சி.

**DAT**

டிப்ளமோ இன் அக்குபஞ்சர் தெரபி. 1 வருட பட்டயப்படிப்பு. தகுதி S.S.L.C. / 10ம் வகுப்பு / அதற்கு இணையான படிப்புகளில் தேர்ச்சி.

**2009-2010** க்கான அட்மிஷன் நடைபெறுகிறது பட்டப்படிப்புகளுக்கு ரூ.100/-ம் பட்டயப் படிப்புகளுக்கு ரூ.50/-ம் கீழ்கண்ட முகவரிக்கு மணியார்டர் செய்தோ அல்லது நேரிலோ விளக்கக் குறிப்பேடும், விண்ணப்பமும் பெற்றுக் கொள்ளலாம்.

DIRECTOR

**INDIAN CELLTHERAPHY INSTITUTE**

7/624, Kumarasamy Raja St., Nagamalai. P.O. MADURAI-625 019 ✆ 94434 47101, 93443 08843, 2458366

# யார் அந்த உழவர்?

## கெஸ்ஸிங் போட்டி முடிவுகள்!










சும்மா சொல்லக்கூடாது. எப்படிப் பட்ட போட்டியை வைத்தாலும் அசத்தி விடுகிறார்கள் நம்ம வாசகர்கள். கெஸ்ஸிங் போட்டிக்கு வந்து குவிந்த கடிதங்களில் பெரும்பாலானவை சரியாகவே இருந்தன. ஆகவே, ஐந்து பேருக்குப் பரிசு என்பதை பத்து பேராக உயர்த்துகிறோம். வாழ்த்துகள்!

*தலா ரூ.250/- பரிசு பெறுவோர்:*

1. ரா.பிரசன்னா, மதுரை,
2. க. மோகன், மங்கலம்,
3. எஸ்.சுதாகர், ஈரோடு,
4. சு.இந்துமதி, திருச்சி,
5. எஸ்.உலகம்மாள், திருநெல்வேலி,
6. எஸ்.பரமேஸ்வரி, வேலூர்,
7. பி.உமாமகேஸ்வரி, சென்னை,
8. ஆ.கண்ணதாசன், சென்னை
9. க.கலா, காவிரிப்பூம்பட்டினம்,
10. எஸ்.ஜனனி கண்ணாத்தாள், திருச்சி.

## வட்டமேஜை



**சு**ந்தர் சி. பாபு சொல்வது சரிதான். அறுசுவை விருந்து சுவைத்த பின் எடுத்த வாந்தி போன்ற ரீமிக்ஸ் பாடல்கள், பிறர் சொத்தை போலிப் பத்திரம் மூலம் அபகரிக்கும் மோசடி போலத்தான்.

**- மல்லிகா அன்பழகன், சென்னை-78**

**து**ள்ளும் மாவோக்கள், தூண்டும் மம்தா தலையங்கம், மத்திய அரசின் அணுகுமுறை எப்படியிருக்க வேண்டு மென்பதைத் தெளிவாக உணர்த்தியது. எத்தனை முறை பாராட்டினாலும் தகும் எனக் கருதுகிறேன்.

**- எஸ்.கே.மூர்த்தி, கும்பகோணம்**

'**சி**வாஜி த சுப்ரீம் பாஸ்' பன்னிரண்டு வாரமும் விறுவிறுப்பாக 'சும்மா அதிரு தில்ல' எனச் சொல்ல வைத்தது.

**- எஸ்.அமிர்தா, சென்னை-26**

'**கொ**ல்லாது கொல்லும்' மது அரக் கனை எதிர்கொண்டு பன்னிருநாள் குடிகேஷத்திரப் போரின் 'வெற்றி-கீதை' யைப் படைத்துள்ளார், அமிர்தம் சூர்யா. பாராட்டுக்கள்.

**-ச.ஆ.கேசவன், இனாம்மணியாச்சி.**

''**ஜீ**வன் சாந்த நிலை அடைய ஒரே வழி ஆசா நாசம்தான்'' என்ற காஞ்சிப் பெரியவரின் அருள்வாக்கு, ஆசைகளை ஒழிப்பதன் அவசியத்தை உணர்த்தும் அற்புத வாக்கு!

**-கே.கஸ்தூரி, வேலூர்**

**கு**க்கூ கவிதைகள் அனைத்தும் இதழுக்குத் திலகமிட்டது போல மின்னின. தொடரட்டும் இந்த 'குக்கூ' கவிதைகள்!

**- வே.முருகேசன், ஆதம்பாக்கம்**

'**அ**றையின் வசீகரம்' கவிதைக்கு நீங்கள் தேர்வு செய்துள்ள புகைப்படம் வெகு ரம்யம்!

**- கே.வெங்கடேசன், வேலூர்**

**ந**டிகை ரோஜா பற்றிய கேள்விக்கு தராசுவின் பதில் 'ரசிக்கத்தக்க கிண்டல்!'

**-ஆர்.ராமசுப்ரமணியன், திருவாரூர்**

# சொன்னது



**பா**லு சத்யாவின் கதை மிக அருமை. பல முறை மயிலை கபாலீஸ்வரர் கோயில் அருகிலுள்ள பிச்சுப்பிள்ளை தெருவை நான் பார்த்ததுண்டு. தியாகி சுப்ரமணிய சிவா வாழ்ந்த பெருமைக்குரிய தெரு அது என்பதை இக்கதை மூலம் அறிந்தேன்.

**-கண்ணன் மஹேஷ், உள்ளகரம்**

'**பொ**ருத்திய நெருப்பு' சிறுகதையின் முடிவு,

# சரிதான்!

நாட்டில் மனிதநேயம் இன்னும் மரித்துப் போய் விடவில்லை என்பதை உணர்த்தியது.

**- பி.ஆர்.மயிலப்பன், ஈரோடு**

''**வ**ண்ணங்களால் ஒரு தவம்'' பகுதியில் இரட்டைப் பக்கங்களில் தங்கமாய் ஜொலித்த நான்கு ஓவியங்களும்... சூப்பர்!

**-எம்.எஸ்.கே.அருள், முனியங்குறிச்சி**

'**ஓ**வர் சீன் ஒடம்புக்கு ஆகாது', 'வெத்து சீன் வேலைக்கு ஆகாது' என்பதை அழகாக விளக்கியிருந்தனர் சேத்தன் - திவ்யதர்ஷினி தம்பதி!

**-ப.கோபிபச்சமுத்து, கிருஷ்ணகிரி.**

**அ**மரர் கல்கி வண்ணத்தூரிகை (அபிராமி) சித்திரம், என் புகுந்த வீட்டு கிராமத்துக் கொல்லைப்புறத்தை கண்முன்னே நிறுத்தியது. ஓவியர் கோபுலுவுக்குப் பாராட்டுகள்!

**- ஆர்.ஷியாமளா, சென்னை-28**

'**பெ**ண்களின் கண்களை 'கயல்' என்று சொல்வது ஏன்?' என்ற கேள்விக்கு, கிரேஸி சொன்ன பதில் மிகவும் அருமை!

**-வி.ஜி.சத்தியநாராயணன், சென்னை-61**

**பா.**ஜ.க.வின் இந்துத்வா பிடிவாதத்தை எடுத்துக்காட்டும் கார்ட்டூன், பாராட்டுக்குரியது.

**-கே.வி.ராமன், சேலையூர்.**


**கல்கி**

பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட்டிற்காக பரதன் அச்சகத்தில் அச்சிட்டு வெளியிடுபவர்:
**லக்ஷ்மி நடராஜன்**

ஆசிரியர் : **சீதா ரவி**

உதவி ஆசிரியர்கள் :
**கதிர்பாரதி, அமிர்தம் சூர்யா**

வடிவமைப்பு :
**எஸ்.ஸ்டீஃபன், எம்.மோகன், பா.கோபால்**

தொலைபேசி : 044 - 4343 8888
தொலைநகல் : 044 - 4343 8899

**ஆசிரியர் குழு :**
044 - 4343 8822
kalki@kalkiweekly.com

**விளம்பரப் பிரிவு :**
044 - 4343 8811
marketing@kalkiweekly.com

**சந்தா பிரிவு :**
044 - 4343 8833
subscription@kalkiweekly.com

**விற்பனை பிரிவு :**
044 - 4343 8844
sales@kalkiweekly.com

இன்டர்நெட் முகவரி :
**www.kalkionline.com**

இணையதளத்தில்...
வாங்கி, வாசித்து, மகிழ...
**www.sangapalagai.com**

**சந்தா விவரம் (ஒரு வருடம்) :**
உள்நாடு : ரூ.500/-
வெளிநாடு : ரூ.3,800/-

கல்கி பில்டிங்க்ஸ்,
47-NP, ஜவாஹர்லால் நேரு சாலை,
ஈக்காடுதாங்கல், சென்னை - 32

இதழில் வெளியாகும் விளம்பரங்களின் உண்மைத் தன்மைக்கு கல்கி நிர்வாகம் பொறுப்பல்ல.



**கோடம்பாக்கத்தில் சமீபகாலமாக எல்லோரையும் பளிச்செனக் கவர்பவராக இருக்கிறார் இயக்குநர் சசிகுமார். காரணம், இயக்குநர், தயாரிப்பாளர், நடிகர் என்ற அவரது வெவ்வேறுவிதமான பரிமாணங்கள்தான். அவர் நடித்த நாடோடிகள் வெளிவந்திருக்கும் நேரத்தில் அவரைச் சந்தித்தோம்.**

**டைரக்டர், தயாரிப்பாளர், இயக்குநர் - உங்களுக்குப் பிடித்த சசிகுமார் யார்?**

''எனக்கு டைரக்டர் சசிகுமாரைத்தான் பிடிக்கும். நான் சினிமாவுக்கு வந்ததே டைரக்ஷனுக்குத்தான். என் முதல் படத்திலேயே நடிகனாக மக்கள் ஏத்துக்கிட்டதாலேயே தொடர்ந்து நடிக்க வேண்டிய அவசியமும் எனக்கு இருக்கிறது. என் மூலமாக நல்ல விஷயங்கள் மக்களுக்குப் போய்ச் சேர வேண்டும் என ஆசைப்பட்டேன். 'பசங்க' ஸ்கிரிப்ட்டுடன் பாண்டியராஜ் வந்தார். உடனே அவரை டைரக்டராக வைத்துப் படம் தயாரித்தேன். புதிய இளம் இயக்குநர்கள் நல்ல கான்செப்ட்டுடன் கோடம்பாக்கத்தில் வந்து கொண்டிருக்கிறார்கள். நான் தயாரிப்பாளராக இருப்பதன் மூலமாக அவர்களுக்கு வாய்ப்பு தர முயற்சிக்கிறேன்.''

**உங்கள் படத்தில் வன்முறை அதிகமாக இருக்கிறதே?**

''சுப்பிரமணியபுரத்தின் இளைஞர்கள் எந்தவித லட்சியமும் இல்லாதவர்கள். அவர்களுக்குத் தெரிந்த வழிமுறை வன்முறைதான். ஆனால் நாடோடிகளின் இளைஞர்கள் படித்தவர்கள். சிந்திக்கத் தெரிந்தவர்கள். இங்கே வன்முறைக்கு இடம் இல்லை. உயிரைப் பணயமாக வைத்து நண்பனின் காதலைச் சேர்த்து வைக்கிறான். அந்த நண்பனின் காதலில் உண்மையில்லை என்று தெரிந்தபின்பும் அவனை மன்னித்து விடுகிறான். இங்கே வன்முறை இல்லை. ரத்தம் இல்லை.''

**எதற்காக தொடர்ந்து நட்பில் துரோகம்?**

''நம்மோடு பத்துபேர் நண்பர்களாக

# மாஸ் ஹீரோக்கள் தேவையில்லையா?

**- இயக்குநர் சசிகுமார்**

இருந்தால் ஒவ்வொருவரும் ஒவ்வொரு விதம். அதில் ஒரிருவர் ரொம்ப சுயநலமாக, எந்த நேரத்திலும் மாறக்கூடியவர்களாக இருப்பார்கள். நாம்தான் சரியாக அடையாளம் காணவேண்டும். துரோகத்துக்குப் பதிலடி கொடுப்பதும், மன்னிப்பதும் அவரவர் இயல்புகளைப் பொறுத்தது. என் வாழ்க்கையிலும் துரோகங்களைப் பார்த்திருக்கிறேன். அவற்றையெல்லாம் கெட்ட கனவாக மன்னித்து, மறந்துவிடுவேன்.''

**உலக சினிமாவை நோக்கி, தமிழ் சினிமா செல்கிறதா?**

''உலக சினிமாவில் தமிழ் சினிமா இடம்பெறுவதற்கே நிறைய மார்க்கெட்டிங் வேலைகள் செய்ய வேண்டியுள்ளது. உலகத் திரைப்பட விழாக்களில் பல்வேறு நாட்டின் இயக்குநர்களும் வந்திருந்து, பார்வையாளர்களைத் தங்கள் படங்களைப் பார்க்க வைக்க முயல்கிறார்கள். அதுபோல நமது டைரக்டர்களும் விழாவுக்குப் படங்களை அனுப்பிவைப்பதோடு நிற்காமல், தாங்களும் சென்று, தங்களின் படங்களை உலகப் பார்வையாளர்களைப் பார்க்க வைக்க முயற்சிக்க வேண்டும். உலகத் திரைப்பட ரசிகர்களுக்கு இந்திய சினிமா என்றாலே அது ஹிந்தி மொழி சினிமாதான் என்ற எண்ணம் இருக்கிறது. இந்த எண்ணத்தையும் மாற்ற வேண்டும்.''

**பெரிய ஹீரோக்கள் உங்கள் படத்துக்குத் தேவையில்லையா?**

''என் கதைக்குத் தேவைப்பட்டால் கண்டிப்பாக பெரிய ஹீரோக்களை வைத்துப் படம் எடுப்பேன். என் படத்துக்கு கதைதான் ஹீரோ.''

**இன்னும் எத்தனை நாளைக்குத்தான் தாடி?**

''இந்த தாடி, சுப்பிரமணியபுரத்துக்காக வைத்தது. சமுத்திரகனி நாடோடிகளிலேயும் தாடியைத் தொடரச் சொன்னார். இன்னைக்கு தாடியே என்னோட அடையாளம் ஆயிடுச்சு. கேரக்டருக்குத் தேவைப்பட்டா கண்டிப்பா தாடியை எடுத்துடுவேன். இது பெரிய பொக்கிஷம் இல்லை; இதற்குப் பின்னாடி ரகசியமும் இல்லை.''

**- ராகவ்குமார்**



''ஸார், நீங்க முன்னால இந்தத் தொழில்ல இருந்தீங்களா?''

- சென்ஸார் போர்ட் அதிகாரி கேட்டபோது முதலில் சற்று திடுக்கிட்டேன்.

அந்த நகைச்சுவை எனக்கு உறைப்பதற்கே கொஞ்சம் நேரமாயிற்று! சற்று தாமதித்து, 'அயன்' படத்தில் கடத்தல் காட்சிகள், கதாபாத்திரங்களின் தத்ரூபத் தன்மையைத்தான் அந்த அதிகாரி தமது கமெண்ட் மூலம் சுட்டிக்காட்டுகிறார் என்பது புரிந்ததும் குபீரென்று சிரித்தேன்! உடனிருந்த தயாரிப்பாளர்களும் அந்தச் சிரிப்பில் சேர்ந்து கொண்டனர். படம், சென்ஸார்

# ஸ்டார்ட்... கேமரா...

சர்டிஃபிகேட் பெற்றுவிட்டதன் நிம்மதியும் அதில் கலந்திருந்தது.

''படம் நல்லா வந்திருக்கு'' என்று தமது சர்டிஃபிகேட்டை ஏற்கெனவே எனக்குத் தந்துவிட்டு ஏவி.எம்.சரவணன் ஸார் கைகட்டி எப்போதும்போல் காஷுவலாகக் காத்திருந்தார். எம்.எஸ்.குகன் ஸாரும் அதிகம் அலட்டிக் கொள்ளவில்லை. சென்னை வெயில் போல விறுவிறுவென்று ஏறியிருந்த என் டென்ஷன், அதிகாரியின் அந்தக் கேள்விக்குப் பின்தான் சற்றே இறங்கத் தொடங்கியது!

படத்தின் சில காட்சிகளை சென்ஸார் ஆட்சேபிக்கக் கூடும் என்கிற சந்தேகத்தினால் அவற்றை நியாயப்படுத்த பல ஆதாரங்களைத் திரட்டி ஒரு ஃபைலில் போட்டுத் தயாராக



**அயன் மைனஸ் ஆய்வுகள் இஸ் ஈகுவல் டு...**

## கே.வி.ஆனந்த்



வைத்திருந்தேன். ஆனால், விவாதங்களுக்கு அவசியமின்றிப் போயிற்று.

'முன்வாள் கடத்தல்காரர்' என்று முத்திரை பெறும் அளவுக்கு, அயன் படத்தில் கள ஆய்வுக்கு முக்கியத்துவம் தந்திருந்தோம். ''படத்தை எடுக்கறதுன்னு முடிவு பண்ணின மூணு மாசத்துக்குள்ள

# ஆனந்த்!

ஸ்கிரிப்டை ரெடி பண்ணிட்டோம். ஆனா கடத்தல் சம்பந்தமான ஆதாரபூர்வமான தகவல்களைச் சேகரிக்க ஆறு மாசத்துக்கு மேலே ஆச்சு ஸார்'' என்றேன் அதிகாரியிடம்.

இதற்காகவே இரண்டு உதவியாளர்கள் அயன் டீமில் வேலை செய்தார்கள்! உதாரணமாக, கொக்கெய்ன் என்ற போதைப் பொருளுடன் சில கெமிகல்கள் சேரும்போது, அது தன் வாசனைத் தன்மையை இழக்கும். இந்த முறையில் 'மணம் மாற்றப்பட்ட' கொக்கெய்னைக் கடத்தும்போது, மோப்ப நாய்களால்கூட கலபத்தில் கண்டுபிடிக்க முடியாது! காவல் துறையை ஏய்ப்பதற்கு, கடத்தல்காரர்களிடம் இதுபோல் பலப்பல வழிமுறைகள்! இன்டர்நெட்டிலும் புத்தகங்களிலும் செய்திகளை அலசி அவற்றிலிருந்து இந்தத் தகவல்களைச் சலித்தெடுத்து அயன் படத்தில் சுவைகூட்டுவதற்காகப் பயன்படுத்தியது அலாதியான அனுபவம்.

பொருட்களைக் கடத்துவதற்காகப் பயன்படுத்தப்படும் அப்பாவிகளை 'குருவிகள்' என்று நிழலுலகம் குறிப்பிடும். இத்தகைய குருவிகளிடம் மணிக் கணக்கில் பேசி, பல அதிரடி கடத்தல் ரகசியங்களை அறிந்தோம். அதனால்தான் அயன் படத்தில் குருவிகள் சம்பந்தப்பட்ட காட்சிகள் யதார்த்தமாக அமைந்தன. திருட்டு சி.டி. தயாரிக்கும் காட்சிகூட சக தயாரிப்பாளர் ஒருவர் விவரித்த டிரமாடிக் அனுபவத்தின் அடிப்படையில் அமைந்ததுதான்!

சினிமாவில் கதாநாயகன் எவ்வளவு சாகசம் செய்தாலும் நம்பகத்தன்மை என்கிற சரடு அதிலே தொடர்ந்து ஓட வேண்டும். காட்சிகளில் கன்டினியூயிடியைப் போலவே நம்பகத்தன்மையின் கன்டினியூயிடியும் அவ்வளவு முக்கியம். அதற்காகப் பாடுபடுகிறபோது நிச்சயம் பலன் கிடைக்கிறது. அயன் மைனஸ் கள ஆய்வுகளை ஒரு கணம் கற்பனை செய்து பாருங்கள்... ''சூர்யாவை வைச்சு சும்மா பொம்மலாட்டம் காட்டிட்டார்யா!'' என்று நீங்கள் விமர்சிக்கும் அளவுக்கு வெறும் எலும்புக் கூடாகத்தான் அது இருக்கும்!

**அ**யன் எனது இரண்டாவது படம் தான் - இயக்குநர் என்ற தகுதியில். ஆனால், யதார்த்தத்தை உறுதி செய்யும் ஒரு பிடிவாதம் நான் காமெராமேனாகப் பணியாற்றிய முதல் படத்தின் முதல் காட்சியை எடுக்கும்போதே பற்றிக் கொண்டது. படம்: தேன்மாவின் கொம்பத்து.

சூப்பர் ஸ்டாரின் முத்து படத்தை மறந்திருக்க மாட்டீர்கள். அதன் மலையாள மூலம்தான் தேன்மாவின் கொம்பத்து. இயக்குநர் பிரியதர்ஷன் என் மீது அபரிமிதமாக நம்பிக்கை வைத்து முதல் வாய்ப்பைத் தந்திருந்தார். முதல் நாள் ஷூட்டிங். கதாநாயகி நடிகை ஷோபனா. வீட்டு வேலை செய்யும் பணிப் பெண் பாத்திரம். காமெராவையும் ஒளியமைப்பையும் ஆயத்தம் பண்ணி வைத்துக் கொண்டு காத்திருக்க, மொடமொட வென்று கஞ்சி போட்டு, மடிப்பு கலையாத காட்டன் புடைவையில் வந்து நின்றார் ஷோபனா. ஃபுல் மேக்-அப் வேறு!

'நாம் இப்போதுதானே ஃபீல்டில் அடியெடுத்து வைக்கிறோம். ஹீரோயினைப் போய் அதிகாரம் பண்ணலாமா?' என்றெல்லாம் தயங்கிக் கொண்டு இராமல் ஷோபனாவையும் அவரது மேக்-அப் உதவியாளரையும் கூப்பிட்டுச் சொன்னேன்.

''வீட்டு வேலை செய்யும் பணியாள் கதாபாத்திரத்துக்கு ஏற்றபடி உடையும் இல்லை; மேக்-அப்பும் இல்லை. ஒப்பனையைக் கலைத்துவிடுங்கள். காட்டன் புடைவையில் கொஞ்சம் அங்கங்கே தண்ணீர் தெளித்து, கசங்க வைத்து உடுத்துங்கள்...''

ஷோபனாவால் ஜீரணித்துக் கொள்ள முடியவில்லை. ப்ரியதர்ஷனிடம் போய், ''யார் இந்தப் புது காமெராமேன்?... 'மேக் அப்பைக் கலைச்சுட்டு முகம் கழுவிக்கிட்டு வா'ன்றாரு. புடைவையைக் கசக்கிட்டுக் கட்டுன்னு உத்தரவு போடறார்...'' என்று புகார் செய்தார்!

''ஓ, அப்படியா சொன்னார் கேமரா மேன்...? அவர் சொன்னபடியே முதல் ஷாட்டுக்கு ரெடியாகி சீக்கிரம் வந்துடுங்க...'' என்றார் ப்ரியதர்ஷன்!

வேறு வழியின்றி ஷோபனாவும் யதார்த்த கெட்-அப்புக்கு மாறினார். சில நாட்கள் வரை அவருக்கு என்னிடமிருந்த கோபம் மாறவேயில்லை!

**படத்தின் கடைசி ஷெட்யூல் முடிவதற்குள் ஷோபனா ராசி ஆகிவிட்டார்!**



ஆனால், படத்தின் கடைசி ஷெட்யூல் முடிவதற்குள் ஷோபனா ராசி ஆகிவிட்டார்! மோகன்லால் - ஷோபனா நடித்த தேன்மாவின் கொம்பத்து பெரிய அளவில் வெற்றி பெற்றது. முதன் முறையாக கேமராவைப் பிடித்த எனக்கு தேசிய விருதையும் வாங்கிக் கொடுத்தது! அதற்குக் காரணம் ப்ரியதர்ஷன்தான்.

**(ஆக்ஷன் தொடரும்)**

எழுத்தாக்கம் :

**எஸ்.சந்திரமௌலி**

PRASHANTI
House of Silk Cottons

# கலக்குதே பிரசாந்தி!



ஒரு பட்டுப் புடைவைக்குரிய பொலிவும், அழகும் வேண்டும். அதே சமயம் விலையும் அதிகமில்லாமல் இருக்க வேண்டும். தண்ணீரில் நனைத்த பிறகும் இளிக்காமல் பட்டின் பளபளப்போடு இருக்க வேண்டும்.

இத்தனை 'வேண்டும்'களுக்கும் ஏற்றதாய் இருப்பவை சில்க் காட்டன் ரகங்கள். சில்க் காட்டன் என்றாலே 'பிரசாந்தி'தான்.

சென்னை சி.ஐ.டி. காலனியில் இருக்கும் 'பிரசாந்தி'யை நிறுவியவர் மாலதி முரளீதரன். சுமார் பதினைந்து வருடங்களாக சில்க் காட்டன் ரகங்களில் வெற்றிக் கொடி நாட்டியவர். உலகம் முழுவதும் இவருக்கு வாடிக்கையாளர்கள். பெங்களூருவில் இரு கிளைகள்! தொலைக்காட்சி சீரியல்களில் அநேகர் கட்டுவது பிரசாந்தி புடைவைகள் தான். (குறிப்பாக 'திருப்பாவை' தொடரில் பாடகி அனுராதா அணியும் புடைவைகள்)

"புடைவைகளை உயர்தரத்தில் தரவேண்டும் என்பதில் உறுதியாக இருக்கிறோம். எங்களுக்கென்று சொந்தத் தறி உண்டு. மாஸ்டர் வீவர்ஸ் எனப்படும் நெசவாளர்கள் இருக்கிறார்கள். பட்டு, பருத்தி இழைகளில் சின்ன குறை இருந்தாலும் அவற்றை நிராகரித்து விடுவோம்" என்று வெற்றியின் சூட்சுமத்தைக் கூறுகிறார்.

இந்தப் புடைவைகளோடு அணிய ஏற்ற ஃபான்சி ஜுவல்லரியும் பிரசாந்தியில் உண்டு என்பது கூடுதல் தகவல்!

சிவப்பில் பச்சை பார்டரிட்டு, ஜரிகையில் கிருஷ்ணர், தேர், ராமாயணக் காட்சிகள் என்று தீம் புடைவைகள் சில்க் காட்டனில் அழகாயிருக்கு. அம்சமாகவுமிருக்கு!




ஹாஃப் அண்ட் ஹாஃப் என்பது இந்த வருட புதிய டிசைன்! மேல் பாதியில் மயில் கழுத்து நிறம், அடர்நீல ஜரிகை பார்டருடன் மின்னுகிறது. கீழ் பாதியில் ராயல் ப்ளூ எனப்படும் ஆழ்ந்த நீலம், ஜரிகை புட்டா மினுமினுக்க பட்டாட்டம் இருக்குல்ல.



நீங்க டீன்ஏஜா? புரோக்கேட் வேலைப்பாடு புடைவை இது. ஃபாண்டா ஆரஞ்சு வண்ணத்தில் உடல், லாவெண்டரும், ஆரஞ்சும் கலந்த தலைப்பு... பார்ட்டிகளில் அணிந்தால் ஜொலிப்பு!





எம்பிராய்டரி இல்லாத சில்க் காட்டனா? நீல நிற எம்ப்ராய்டரி புடைவையில், பாவஞ்சி பார்டர் அழகு தர. அதை மேலும் கவர்ச்சியாக்க குந்தன் கற்கள் மற்றும் ஜர்தோசி வேலைப்பாடுகள் செய்யப்பட்ட பிரசாந்தியின் கைவண்ணத்தில் உள்ளம் கொள்ளை போகுமே!





கறுப்பு உடலில் மெரூன் பார்டர். கான்ட்ராஸ்ட் பச்சை, சிவப்பு வண்ணங்களில் கவர்ச்சியான புட்டாக்கள் நெய்யப்பட்டு, உங்கள் அழகை பல மடங்கு எடுத்துக்காட்டும் மிக அழகான புடைவை இது!

புடைவை மட்டுமான்னு முணுமுணுக்காதீங்க. மாடர்ன் உடையும் இருக்கு! தங்க நிற பிளாக் பிரிண்ட் செய்யப்பட்ட அழகான குர்தி இதோ! பிரசாந்தியில் சில்க் காட்டன் குர்தீஸ்கூட பிரசித்தி!



இந்த அழகான பிங்க் + பச்சை புடைவை 'பிக்மெண்ட் பிரிண்ட்' எனப்படும் தங்க நிற பிரிண்ட் உடலில் பொருத்தமான ஜரிகையோடு செய்யப்பட்டுள்ளது. ..வாவ்.. சூப்பர்!

பிரசாந்தியில் ஆடித் தள்ளுபடி உண்டு! ஜூலை 1 முதல் ஆகஸ்ட் 31 வரை சும்மா பூந்து விளையாடுங்க யூத் கேர்ள்ஸ்!

சென்னை : போன் : 2499 1850, 2499 7636

பெங்களூரு : மல்லேஸ்வரம் : 080-23341632,

ஜெயநகர் : 080-22449595

மாடல் : அவந்திகா, பூஜா

தொகுப்பு : பத்மினி பட்டாபிராமன்

படங்கள் : ஸ்ரீஹரி




கடந்த நாற்பது வாரங்களாக விஜய் தொலைக்காட்சியில் வெற்றிகரமாக நடந்து வருகிறது 'நடந்தது என்ன?' நிகழ்ச்சி. ஆச்சர்யமான மனிதர்கள், அதிர்ச்சி தரும் கிராமங்கள் என்று அலைந்து திரிந்து நிகழ்ச்சியை வழங்குபவர் பத்திரிகையாளர் - எழுத்தாளர் ராஜ்நாராயணன். ஒவ்வொரு வியாழனும் அதிரடியான செய்திகளுடன் நேயர்களைக் கவரும் 'நடந்தது என்ன?' நிகழ்ச்சியை, திரையில் தொகுத்து வழங்கு பவர் 'நீயா-நானா' கோபி.

''இந்தத் தொடரை நாங்கள் படம் பிடிக்கும்போது அடைந்த அனுபவங்கள் ஏராளம். அதில் ஒன்றை மட்டும் எப்போ தும் மறக்க முடியாது'' என்ற ராஜ்நாரா யணன் ரிவர்ஸ் கியரில் கொஞ்சம் போனார்.

கோடங்கிகளின் ராத்திரி ரவுண்ட்-அப்பை அப்படியே படம்பிடித்துத் தரும் நோக்கில் கயத்தாறு பக்கம் சுப்பிர மணியபுரம் என்ற கிரா மத்துக்குச் சென்றிருக் கிறார்கள். மாலை கோடங்கியைச் சந்தித்து விஷயத்தைச் சொல்ல அவரும், ''பேஷ்... ராத்திரி பதினொரு மணிக்குச் சுடு காட்டுக்கு வந்திடுங்க'' என் றிருக்கிறார். காமிராமேன், அவரது உதவியாளர், ராஜ்நாரா யணன், உள்ளூர் நண்பர்கள் இரண்டு பேர் ஆகியோர் சுடு காட்டில் கோடங்கிக்காகக் காத் திருந்தார்கள். சுடுகாட்டு சீனுக்கு மேலும், திகிலைக் கூட்ட இரண்டு, மூன்று டயரை எரியவைத்தது படப்பிடிப் புக் குழு. தெருவிலிருந்து கால் கொலுசு, கைமணிகள் குலுங்க பயமுறுத்தும் காஸ்ட்யூமுடன் வந்த கோடங்கி, வரும் போதே எரிந்து கொண்டிருந்த டயர்களைக் கால்களால் பந்தாடினார். அந்த அதிரடியே



குழுவைப் பயமுறுத்தியது. அதன் பின் அன்று மாலை அடக்கம் செய்யப் பட்ட ஒருவரின் சமாதி அருகே மண்டை யோட்டுடன் பூஜைக்கு அமர்ந்தார் கோடங்கி. அதன்பின்? ராஜ் தொடர்கிறார்.

''கோடங்கியின் பூஜையை படம்பிடித் துக் கொண்டிருந்தோம். நிமிடத்துக்கு நிமிடம் கோடங்கியின் குரல் ஹைபிட்ச்க்



# சுடுகாடு-ஜக்கம்மா

## - அலறி ஓடிய விஜய் டீ.வி. குழு

குச் சென்று கொண்டிருந்தது. அந்தச் சூழலே எங்களை நடுங்க வைத்தது. இறுதியாக 'ஜக்கம்மா' என்ற அவர் கொடுத்த பயங்கரக் குரலில் எங்கள் காமிராக்காரரும், அவர் உதவியாளரும் 'ஐயோ' என்று அலறி சீனை விட்டு ஓடினார்கள். ஜக்கம்மா என்றபடி எழுந்த கோடங்கி பயமுறுத்தும் குரலில் குறி சொல்லக் கிளம்பி விட்டார். இப்போது நினைத்தாலும் உடலை நடுக்கும் திடுக் சம்பவம் அது'' என்கிறார்.

ராஜ்நாராயணன் பத்திரிகையாளராக, ஒன்றுபட்ட நெல்லை மாவட்டத்தில் நூற்றுக்கணக்கான கிராமங்களில் கால் பதித்தவர்.

''முக்கூடல் என்ற ஊரில் முருகன் என்ற சிறுவனுக்கு திருட்டுப் பழக்கம் இருந்ததால் கால்களில் சங்கிலி போட்டுக் கட்டி வைத்து விட்டார்கள். 27 வருடங்கள், அவர் சங்கிலி அவிழ்க்கப்படவில்லை. சங்கிலியுடன் கிராமத்தைச் சுற்றி வந்த அவரை, சங்கிலி முருகன் என்றழைத்தார்கள். இந்தக் கொடுமையைப் படம் பிடித்துக் காட்டினோம். அதைப் பார்த்த நெல்லை ஆட்சியாளர் பிரகாஷ், உடனடியாக சங்கிலியை விடுவிக்க ஏற்பாடு செய்தார். எங்கள் நிகழ்ச்சியின் மூலம் விடுதலை பெற்றான் முருகன். வெள்ளாளன் குளம் கிராமத்தில் குரங்கு பே[ான்ற] தோற்றம் மட்டுமல்லாம[ல்] நடத்தையிலும் குரங்குகளைப் பிரதிபலித்த சகோதரர்கள் இருவரைப் பற்றிய நிகழ்ச்சியைப் பார்த்த மாவட்ட ஆட்சியாளர், அவர்களைப் பராமரிக்க மாதம் 400 ரூபாய் உதவித் தொகை வழங்க உத்தரவிட்டார். இந்தச் சம்பவங்கள், நம்மாலும் சமூகத்துக்குச் சிறிய பங்கைச் செய்ய முடிந்ததே என்ற திருப்தியைக் கொடுத்தன'' என்று சொல்லும் ராஜ், ''இலந்தைக்குளம் கிராமத்தை மறக்க முடியாது'' என்கிறார். தவறான குற்றச்சாட்டின் பேரில் கணவர் தண்டிக்கப்பட்டதால் ஆத்திரமடைந்த பொம்மி என்ற பெண், 'இனி இந்தக் கிராமத்தில் பெண்கள் எல்லோரும் வெள்ளைச் சேலை அணிய வேண்டும்' என்று சாபமிட்டாராம். பொம்மியைத் தெய்வமாக வழிபடும் அந்தக் கிராமத்தில், கல்யாணம் ஆன, ஆகாத பெண்கள் அனைவரும் இன்று வரை வெள்ளைச் சேலையே அணிகிறார்கள்.

- ஸ்ரீநி




# கல்கி

2009 ஜூலை 12
விரோதி ஆனி 28
மலர் : 67
இதழ் : 50


தமிழ்த்திரு
நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி
பாப்பா - பாரதியார்

## இலங்கைக்கு நிர்ப்பந்தம் கொடுப்போம்!

**து**ம்பை விட்டு வாலைப் பிடிக்கும் கதைதான் தமிழ்நாட்டில் நடந்துகொண்டிருக்கிறது! இலங்கையில் நடந்த 'இனப் படுகொலை'க்கு எதிராக, சட்டசபையில் தீர்மானம் நிறைவேற்ற அ.தி.மு.க.வும் பிற எதிர்க்கட்சிகளும் முயற்சி செய்ய, அதற்கு அனுமதி மறுக்கப்பட, இவர்கள் கோஷம் எழுப்ப, வழக்கம்போல் வெளியேற்றப்படும் படலம் அரங்கேறியிருக்கிறது! இத்தகைய அரசியல் நாடகங்களால் இலங்கை வாழ் இன்றைய தமிழர்களின் வாழ்க்கை எவ்வாறு முன்னேறப் போகிறது? நமது அரசியல்வாதிகள் ஒன்று சேர்ந்து, இலங்கை அரசுக்குத்தான் அழுத்தம் கொடுக்க வேண்டும் - தமிழர்களின் உரிமைகளை நிலைநாட்டும் பணியை துரிதப்படுத்தி நிறைவேற்ற ஒரு காலக்கெடுவே வைக்கலாம். பிரபாகரனும் விடுதலைப்புலிகளும் வன்முறைத் தாக்குதல் நடத்திவந்த காலத்தில், இலங்கை அரசை நிர்ப்பந்திக்கும் தார்மிக உரிமை நமக்கு இருக்கவில்லை. ஆனால், இன்று நிலைமையே வேறு!

இலங்கையில் தமிழ் மாகாணங்களுக்கு நிர்வாக அதிகாரம் அளிப்பதற்கான பதின்மூன்றாவது சட்டத் திருத்தத்தைக் கொண்டுவர அனுமதிக்காமல், அங்கே பல்வேறு சிங்களச் சார்பு கட்சிகள் எதிர்ப்பு தெரிவித்து வருகின்றன. தமிழர்வாழ் பகுதிகளுக்குக் கூடுதல் அதிகாரம் தரப்பட்டுவிடக் கூடாது என்பதில் அவை குறியாக இருக்கின்றன!

தமிழ் அமைப்புகளோ, அந்தச் சட்டத் திருத்த முன்வடிவையே நிராகரித்துவிட்டன. அந்தத் திருத்தம் வெறும் கண்துடைப்பு,






அதிகாரங்களைத் தருகிற மாதிரி தோன்றினாலும் கட்டுப்பாடு ஜனாதிபதி கையில்தான் இருக்கும்; தமிழர்களை நேரடியாக மைய அரசு கட்டுப்படுத்தி, நெருக்கடி தரவே அது உதவும் என்று எச்சரிக்கைக் குரல் எழுப்பியுள்ளன. இலங்கை அரசோ இந்த 'அரைகுறை அதிகாரம்' தரும் சட்டத் திருத்தத்தை நிறைவேற்றுவதற்குக்கூட முன்வராமல், தமிழர்களின் வாழ்க்கையை மறு சீரமைப்பு செய்து, அவர்களைத் தங்களுடைய சொந்த மண்ணில் இருக்கும் வாழ்விடங்களுக்குத் திரும்பச் செய்வதே முக்கியப் பணி என்று கூறி வருகிறது.

உரிமைகள் ஏதுமின்றி, இலங்கைத் தமிழர்கள் தங்கள் பழைய வாழ்விடங்களுக்குத் திரும்பி என்ன பயன்?! அவர்களுடைய வாழ்க்கை முன்பு போல் அடிமைத்தனமானதாகவே இருக்கும்; அல்லது மேலும் கொடூரமானதாக மாறும்!

சட்டரீதியாக தமிழ் மாகாணங்களுக்கு உரிமைகள் வழங்கும் பணியை, மறுசீரமைப்புப் பணியுடன் இணைத்தே செய்ய வேண்டும். அப்போதுதான் இலங்கை அரசின் நோக்கத்தில் தமிழர்களுக்கு நம்பிக்கை பிறக்கும். இலங்கைத் தமிழர்கள் வாழ்வில் விடியல் தோன்றும்.

இலங்கை அரசை இந்த ரீதியில் கட்டாயப்படுத்தி நிர்ப்பந்திக்க, தமிழகத்தின் எந்த அரசியல் கட்சியும் முன் வராதது துரதிர்ஷ்டவசமானது. மத்திய அரசு, வடக்கு - கிழக்கு மாகாணங்கள் உருவாக்கம், அவற்றின் உரிமைகள் - செயல்பாடு, தமிழர்களின் பாதுகாப்பு மற்றும் வாழ்க்கைத் தரம் என அனைத்து விஷயங்கள் குறித்தும் தட்டிக் கேட்க வேண்டும். இப்போது இலங்கைத் தமிழர் பிரச்னையில் நாம் தலையிடாவிட்டால், அது மிகப் பெரிய வரலாற்றுப் பிழையாகிவிடும். இலங்கைத் தமிழர்கள் வஞ்சிக்கப்பட்டால், உலகெங்கும் உள்ள தமிழர்கள், தங்கள் ஆதரவாளர்களின் துணையோடு இலங்கையில் மீண்டும் ஓர் இயக்கம் தோன்ற உதவக்கூடும். அது விடுதலைப் புலிகள் இயக்கத்தையும் விஞ்சும் வன்முறை இயக்கமாக அமைந்துவிடுகிற வாய்ப்புண்டு. அவ்வாறு நிகழ்ந்தால், தமிழகமும் அதனால் இந்தியாவும்கூட கடுமையாகப் பாதிக்கப்படும் என்பதை மறந்துவிடலாகாது! ●

நீதிபரிபாலனத்தில் தமிழகத்தைச் சேர்ந்த ஓர் அமைச்சர் குறுக்கிட முயற்சி செய்திருப்பது தமிழகத்துக்கே தலைகுனிவு. நீதிபதி ரெகுபதி விவகாரம் வெடித்ததை அடுத்து, நீதித்துறையினரும் வழக்குரைஞர் அமைப்புகளும் நாடெங்கிலுமிருந்து கண்டனக் குரல் எழுப்பியுள்ளன. ஆனால் தமிழக முதல்வர் மௌனம் காக்கிறார்!

நாற்பதுக்கு ஒன்பது மார்க் வாங்கி தேர்வில் ஃபெயில் ஆகிறார் ஒரு மாணவர்! தமது விடைத்தாளைத் திருட்டுத்தனமாக மாற்ற முயற்சி செய்கிறார்; மாட்டிக் கொள்கிறார்! சி.பி.ஐ. வழக்கு பதிவாகியுள்ள நிலையில் அவர் கேட்ட முன்ஜாமீனை மறுக்கிறார் சென்னை உயர்நீதிமன்ற நீதிபதி ரெகுபதி. மீண்டும் முன்ஜாமீன் கோரி மனு வருகிறது! மனுதாரருக்காக ஆஜராகும் வழக்குரைஞர் நீதிபதி ஒருதலைபட்சமாகச் செயல்படுவதாகக் குற்றம்சாட்டுகிறார்! பொறுமை இழக்கும் நீதிபதி ரெகுபதி, முன்ஜாமீனுக்கு தமிழகத்தைச் சேர்ந்த மத்திய அமைச்சர் ஒருவர் அழுத்தம் கொடுத்ததாக நீதிமன்றத்திலேயே தெரிவித்து, முன்ஜாமீன் கோரிய கிருபாஷங்கரின் வழக்குரைஞரைக் கண்டனமும் செய்கிறார்!

அமைச்சரின் வற்புறுத்தலுக்குப் பணிய மறுத்துள்ள நீதிபதி ரெகுபதி, தேனி மாவட்டத்தைச் சேர்ந்தவர். கிரிமினாலஜியில் உயர் படிப்பு படித்தவர். முப்பது வருட நீதிமன்ற அனுபவம். பிரபல வழக்கறிஞர் என்.டி.வானமாமலையின் ஜூனியராக இருந்தவர். எந்த வித அரசியல் பின்புலமுமில்லாமல், 2005ல் உயர்நீதிமன்ற நீதிபதியாக நியமிக்கப்பட்டவர். ஆச்சர்யப்படுத்தும் வகையில் சில உத்தரவுகளைப் போடுவார். சமீபத்தில் பெரியார் தி.க. சேர்ந்தவர்களை ஜாமீனில் விடுவிக்கும்போது, ஒரு வாரம் அவர்கள் வீட்டின் முன் தேசியக் கொடி ஏற்ற உத்தரவு போட்டவர். இவ்வாறு நிபந்தனை விதிப்பதை ஏற்க முடியாது என்று அந்த நபர்கள் மீண்டும் முறையீடு செய்துள்ளனர்.

அமைச்சரின் தலையீட்டால் சர்ச்சையாகிப் போன வழக்கை, வேறு நீதிபதியிடம் மாற்றுங்கள் என்று தலைமை நீதிபதியிடம் கேட்டுக் கொண்டு விட்டார் ரெகுபதி.

லஞ்ச ஒழிப்பு இயக்குநரிடம் தமது உறவினருக்காக சிபாரிசு செய்த பூங்கோதையை அமைச்சர் பதவியிலிருந்து நீக்கினார் முதல்வர். இந்த விஷயத்தில், நீதிபதிக்கு நிர்ப்பந்தம் கொடுக்க முயன்ற அமைச்சர் யார் என்பது எல்லாருக்கும் தெரியும். குறுகிய அரசியல் நோக்கம் பார்க்காமல் அந்த அமைச்சரைப் பதவி நீக்கினால் முதல்வரின் மேன்மை உயரும்! ஆனால், 'தம்மை வற்புறுத்தியதாக நீதிபதி குறிப்பிடும் அந்த அமைச்சரின் பெயரை வெளியிட்டால்தானே நடவடிக்கை எடுக்கலாம்?' என்று சட்டசபையில் பேசியுள்ளார் துரைமுருகன். மத்திய சட்ட அமைச்சரும் இதையே கூறியுள்ளார்!

கண் மருத்துவப் படிப்பில் கோல்மால் செய்து மார்க் வாங்கினால் எதிர்காலத்தில் எத்தனையோ பேர் பாதிக்கப்படுவார்களே! அதற்காகவேனும், 'அந்த' அமைச்சர் தண்டிக்கப்பட வேண்டாமா? எனினும், எந்த நிர்ப்பந்தத்துக்கும் பணியாத நீதித்துறையை நூற்றுக்கு நூறு பாராட்டலாம்!

- ப்ரியன்



# நீதித்துறைக்கு நூறு!



# பேனா மன்னருக்குத் தங்கப்

இந்த அத்தியாயத்தை எழுத ஆரம்பிக்கும்போது பேனா ஒழுகத் தொடங்கி விரல்களெல்லாம் மசியாகிவிட்டது. ''இதன் ஆயுசு இவ்வளவுதான்'' என்று தீர்மானித்து குப்பையில் போட்டுவிட்டு, புதிய பேனா வாங்கிவரப் போனேன். வீட்டுக்கு வெகு அருகிலேயே ''சுமனா ஸ்டேஷனரி'' இருக்கிறது. ''எதுக்கு ஸார் ஃபவுண்டன் பேனாவோடு போராடறீங்க? தினுசு தினுசா பால்பாயிண்ட், ஜெல் பேனா, இங்க் கார்ட்ரிட்ஜ் எல்லாம் வந்தாச்சு'' என்றார் ஸ்டோர் அதிபர்.

''அதெல்லாம் உதவாது. லீக் ஆகாத பேனா கொடுங்க'' என்று முப்பத்தைந்து ரூபாய்க்கு வாங்கி வந்தேன். அதென்னவோ இங்க் புட்டியைத் திறந்து, ஃபில்லரால் பேனாவை நிரப்பி, கழுத்தைத் திருகி, தலைகீழாகப் பிடித்து, பாட்டிலுக்குள் இங்க் சொட்டுவதைப் பார்த்தால்தான் எழுதும்போது ஒரு திருப்தி உண்டாகிறது. தொட்டில் பழக்கம்!

அமரர் ''கல்கி''யிடம் ஒரு மலிவு விலை ''ஸ்வான்'' பேனா இருந்தது. அன்னப்பட்சி உருவம் கிளிப்பிலும் நிப்பிலும் பொறிக்கப்பட்டிருக்கும். ஒரு சமயம் அது கீழே விழுந்து நிப் முனை கிளி மூக்கு ஆகிவிட்டது! ''தம்பி! இதை சரி பண்ண முடியுமா பாரு'' என்றார் அப்பா. நான் இலேசாக அதைத் தட்டிக் கொட்டி நிப்பை நிமிர்த்தினேன். கல்கி பத்திரிகை அச்சாகும் காகிதத்தில் வேஸ்ட் விழும். அதை அளவாக வெட்டி, கம்பி அடித்து, 'பேட்' செய்து கொடுப்பார்கள். அதில்தான் ''கல்கி'' வாரம் ஒரு நாள் இரவெல்லாம் கண் விழித்து எழுதுவார். மறுநாள் காலை தொடர்கதைப் பகுதி, ஆடல் பாடல் விமர்சனம், தலையங்கம் எல்லாம் தயாராக இருக்கும். அவ்வளவையும் எழுதியது நான் ஓரளவு சரி செய்த, முனை பிளந்த பேனாதான்! அது சொர சொர காகிதத்தில் ''கரக் கரக்''கென்று ஒலி எழுப்பியபடி இடம் வலமாக நகரும்!

ரசிகமணி டி.கே.சி. ஒரு சமயம் சென்னை வந்தபோது என்ன பார்த்தாரோ, நினைத்தாரோ தெரியாது, விலை உயர்ந்த 'பார்க்கர் ஆல் கோல்ட்'' பேனா வாங்கி ''கல்கி''க்குப் பரிசளித்தார். அவருடைய அன்புப் பரிசை மறுதலிக்க முடியாமல் பெற்றுக் கொண்டார் ''கல்கி''. பெருமிதத்துடன் ஜிப்பாவின் முன்புறம் பட்டனுக்குக் கீழே செருகிக் கொள்வார்.

எழுத்தின் மதிப்புக்கும் பேனாவின் கிரயத்துக்கும் சம்பந்தம் இல்லை என்று உணர்த்துவதுபோல, ஒரு சமயம் சென்னை விமான நிலையத்தில் அந்தப் பேனா தொலைந்து போய்விட்டது! அப்பாவுடைய ஜிப்பாவின் முன்புறம் அம்பு வடிவில் பேனாவின் 'கிளிப்' காணப்படாதபோது, ''பேனா எங்கே?'' என்று கேட்டேன். ''டாய்லெட் போனேனா, அங்கே நழுவி கழன்று 'ஃபிளஷ் அவுட்'டில் விழுந்துவிட்டது'' என்றார். ''அடடா! ரொம்ப விலை உயர்ந்த பேனா வாச்சே!'' என்றேன். ''விலையைப் பற்றி என்ன; டி.கே.சி.யின் அன்புப் பரிசு என்பதுதான் முக்கியம். பரிசு போனாலும் அவர் அன்பு எங்கேயும் போய்விடாது''

கல்கி ராஜேந்திரன்

என்று எனக்கு ஆறுதல் சொன்னார்!

சென்ற இதழில் இத்தொடரின் அத்தியாயத்துக்கு நான் தந்திருந்த "பேனா மன்னர்கள்" என்ற தலைப்பு "கல்கி" அவர்களிடம் கடன் வாங்கப்பட்டதுதான். அகில இந்திய பத்திரிகையாளர் மகாநாடு சென்னையில் நடந்தபோது அந்தத் தலைப்பில் அது பற்றிய கட்டுரை எழுதியிருந்தார். "கல்கி" என்ற பேனா மன்னருக்கு ரசிகமணி, தங்கப் பேனா தவிர வேறு சில பரிசுகளும் தந்திருக்கிறார். ஒரு சமயம் குற்றாலம் சென்றிருந்தபோது, ரசிகமணி தமது புத்தக அலமாரியைத் திறந்து ஏதோ ஒரு புத்தகத்தை எடுத்தார். அருகிலிருந்த நான், "அட!" என்று வியப்பொலி எழுப்ப, ரசிகமணி என்னைத் திரும்பிப் பார்த்தார். "எத்தனை அழகான அலமாரி! கதவுகளில் கூட ஷெல்ஃப்புகள் இருக்கே! ஒரு அலமாரிக்குள்ளேயே மூணு அலமாரி!" என்று நான் ஆச்சர்யங்களை அடுக்கினேன். ரசிகமணி புன்னகைத்தார். நாங்கள் சென்னை திரும்பி ஒரு மாதத்துக்குள் ரயில்வே பார்ஸலில் புத்தம் புதிய புத்தக அலமாரி என்னைத் தேடி வந்துவிட்டது! அந்த 'த்ரீ இன் ஒன்' அலமாரியில் அப்பாவுடைய புத்தகங்களைக் கொஞ்சம் கர்வத்துடனேயே அடுக்கி வைத்து, அவர் கேட்கும்போது, கேட்ட புத்தகத்தை எடுத்துக் கொடுத்து வந்தேன்.



* "கல்கி" மடியில் கௌரி



* "கல்கி"யின் கடிதம்

பேனாவும் அலமாரியும் மட்டுமா தந்தார் டி.கே.சி.? கலை ஆர்வத்தையும் இலக்கியப் பிரேமையையும் "கல்கி"க்கு ஊட்டி வளர்த்தார். "டி.கே.சி. இல்லை

யென்றால் சிவகாமியின் சபதம் ஓர் அமர இலக்கியமாக உருவாகியிருக்காது'' என்று நான் முன்னமே எழுதியிருக்கிறேன். தவிர, ''கள்வனின் காதலி'' நாவல் மட்டுமின்றி, ''புன்னைவனத்துப் புலி'', ''காதராக் கள்ளன்'', ''மாடத்தேவன் சுனை'' போன்ற பல கதைக் கருக்கள் டி.கே.சி.யின் தொடர்பால் ''கல்கி''க்குக் கிடைத்த பொற்காசுகள். அவற்றை வேலைப்பாடு மிக்க தங்க நகைகளாக உருவாக்கிய ஆற்றல் ''கல்கி'' அவர்களுடையது. டி.கே.சி., வாணர் குலம் பற்றிய கவிதை களை எழுதி அனுப்பியிருக்கவில்லை யென்றால் ஒரு வந்தியத்தேவன் இந்த அளவுக்கு ஒரு கம்பீரமான கதாபாத்திரமாக உருவாகியிருக்க மாட்டான். ''கல்கி''யின் கிரியா ஊக்கி ரசிகமணி.

ஊக்கமளிப்பதும் பெறுவதும் ஒரு புறமிருந்தாலும், வாராவாரம் சிந்தித்து கதையோ கட்டுரையோ தலையங்கமோ ''கல்கி''தானே எழுதவேண்டும்! ''கல்கி'' சிந்திக்க ஆரம்பித்தால் அறையில் குறுக் கும் நெடுக்குமாக நடந்து கொண்டே யிருப்பார். அடி உதட்டைக் கிள்ளி விட்டுக் கொள்வார். முக க்ஷவரம் செய்து கொள்ள உட்கார்ந்தால் நிலைக் கண்ணாடியில் தமது உருவத்துக்குப் பதில் தமது கதாபாத்திரங் களின் உருவங்களையும் செயல்பாடு களையும் திரைப்படம் போல காண ஆரம் பித்து விடுவார்! அந்த நாளில் 'பிளேடு' தீட்டுவதற்கென்று குழிவாக கண்ணாடி யில் செய்து ஒரு ''மினி அம்மி'' இருக்கும். அதில் பிளேடை வைத்து விரலால் மையத் தில் இலேசாக அழுத்தி, இடமும் வலமு மாக தேய்த்துக் கொண்டிருந்தால் பிளேடு கூர்மை பெறும் என்று ஒரு நம்பிக்கை! ''கல்கி'' பிளேடு தீட்ட ஆரம்பித்தால், அவர் மனசு அந்த வாரம் எழுத வேண்டிய தொடர்கதைப் பகுதியில் ஒன்றி விடும்! கை மட்டும் இயந்திரமாக இயங்கிக் கொண்டிருக்கும். கடிகாரத்தில் நேரம் ஓடிக்கொண்டே இருக்கும்! எனக்கே பொறுக்க முடியாத நிலையில் அவரை அணுகி, கையிலிருந்து பிளேடையும் அதைத் தீட்டும் கண்ணாடிக் கல்லையும் மெதுவாக வாங்கிக் கொள்வேன். திடுக் கிட்டு விழித்தவர் போல கற்பனை உலகி லிருந்து திரும்பி குளிக்கப் போவார்!

''கல்கி'' எப்படி எழுதினார் என்பதை விட என்ன எழுதினார் என்பதுதான் முக்கி யம். என்றாலும் எப்படி எழுதினார், எவ் வாறு சிந்தித்தார் என்று பார்ப்பதிலும் ஒரு சுவாரஸ்யம் இருக்கத்தானே செய்கிறது! அவரிடம் இருந்த குறை நிறைகள் இரண் டேதான். ஒன்று, வேலைச் சுமைகள் மிக அதிகம்; இரண்டு, அவற்றைச் செய்வதற் கான உடல் ஆரோக்கியம் மிகக் குறைவு! இதனால் ஓர் அந்தரங்கப் பணியாளன்

**கல்கி, பிளேடு தீட்ட ஆரம்பித்தால், அவர் மனசு அந்த வாரம் எழுத வேண்டிய தொடர்கதைப் பகுதியில் ஒன்றிவிடும்**

போல நான் அவருக்குச் செயல்படநேர்ந் தது. ஆஸ்த்துமாவினால் அவதிப்பட்டதால் அவர் அடிக்கடி இருமி உமிழ்வார். அந்த எச்சில் கிண்ணத்தை அவ்வப்போது சுத்தி கரித்து வைப்பது தொடங்கி, ஆயுர்வேத வைத்தியர் சங்குண்ணி மேனன் கொடுத்த தைலத்தை அவர் உடலில் தடவிக் குளிப் பாட்டுவது வரை அவருக்காக பல்வேறு காரியங்களைச் செய்திருக்கிறேன். அவர் வெளியூர் சென்றால் பெட்டியில் துணி மணிகள் அடுக்குவது, படுக்கை கட்டுவது முதல் ஹிந்து நாளிதழில் அவர் கேட்கிற செய்தியைத் தேடி எடுத்துத் தருவது வரை

பல விதங்களில் உதவியிருக்கிறேன். குன்றாத அன்புடனும் ஒரு மரியாதை கலந்த பெருமிதத்துடனும் இவற்றைச் செய்வேன். நான் மருத்துவக் கல்லூரியில் சேர்ந்து பி.ஃபார்ம் படித்துக் கொண்டிருந்த சமயம் அவருக்கு ஒரு நாள் நான் கால் மிதித்துக் கொண்டிருந்தேன். எனது குதிகாலால் இலேசாக மிதித்து அந்த இதத்தில் அவரைக் கண்ணுறங்க வைப்பது எனக்கிருந்த பணிகளில் ஒன்று.

''ஏண்டா, என்னையே கவனிச்சிண்டிருந்தா உன் படிப்பு என்ன ஆகிறது?'' என்று மனவேதனை எட்டிப் பார்க்க கவலையுடன் கேட்டார்.

''கவலைப்படாதீங்கோ! பிரமாத மார்க் வாங்காவிட்டாலும் பி.ஃபார்ம் டிகிரி வாங்கி விடுவேன், நிச்சயம்'' என்று ஆறுதலாக உறுதி அளித்தேன். ஆனால், என் துரதிர்ஷ்டம், நான் பட்டம் பெறுவதைக் காண அவர் உயிருடன் இல்லை!



**அ**வருக்கு நான் செய்த பணிவிடைகளிலெல்லாம் மிகச் சிக்கலான ஒன்று என்னை ரொம்ப சோதித்துவிட்டது. ''கல்கி'' தமது மடியில் தவழ விட்டுக் கொஞ்சி மகிழ்ந்த ஒரே பேரக் குழந்தை கௌரி (ஆனந்தி மகள்). அவளை ஆசையோடு தடவிக் கொடுத்தபடியே என்னிடம் சொல்வார்: ''ஆண்டவன் படைப்பில் எவ்வளவு அற்புதம் பார்த்தாயா? இத்தனூண்டு குழந்தைக்கு இத்தனூண்டு கால் கைகள், அவற்றில் குட்டி குட்டி விரல்கள்; விரல்களில் சின்னஞ் சிறு நகங்கள்... எத்தனை கச்சிதமான, அழகான வரம் கொடுத்திருக்கான்!'' கௌரி மல்லாந்து படுத்து, தமது மார்பில் இரு கால்களாலும் மாறி மாறி உதைப்பதை, பரவசமடைந்து ஏற்பார், ''கல்கி''.

அந்த கௌரி, தனது மூன்றாவது வயதில் ஒரு நாள், தாத்தா தன்னுடன் விளையாடாமல் ஏதோ எழுதிக்கொண்டே இருக்கிறாரே என்ற கோபத்தில் மேஜை மீது எழுதி வைக்கப்பட்டிருந்த தாள்களை ஒரு இழுப்பு இழுத்தாள்; 'சர் சர்' என்று எல்லாவற்றையும் எட்டாகக் கிழித்தும் விட்டாள்! ஃபேன் காற்றில் துகள்கள் பறக்க, ''ஏய், மக்கு!'' என்று அதட்டியபடியே கௌரியை நான் நெருங்கினேன்.

''குழந்தைக்கு என்னடா தெரியும்?'' என்று என்னை அதட்டிய ''கல்கி'', ''எல்லாத்தையும் திரட்டி எடுத்து, பக்கம் சரி பார்த்து ஒட்டேன்!'' என்று எனக்கு உத்தரவு போட்டார்.

குந்தவையையும் வந்தியத்தேவனையும் நந்தினியையும் பழுவேட்டரையரையும் ஒன்று சேர்த்து ஒட்ட வைக்க நான் அன்று பட்டபாடு... ஆயுசுக்கு மறக்குமோ!

**(அடுத்த வாரம் - பட்டியல்: மந்திரிப் பதவிகளுக்கு அல்ல)**

# காஃபியில்



"என்னைக் கொஞ்சம் வெட்டி நறுக்கி செதுக்கி, பார்வைக்கு விருந்தாகப் படைத்து விடு என்று ஒவ்வொரு முண்டு முடிச்சுகளும் கெஞ்சுவதாகத் தோன்றும் எனக்கு" எனக் கூறுகிறார் தாண்டிக்குடி மணிகண்டன்.

விறகாய் எரிந்து கரிக்கட்டைகளாக ஆகாமல், கலைப்பொருட்களாக மாறுகின்றன திண்டுக்கல் மாவட்டம் தாண்டிக்குடி மலைக்கிராமத்தின் காஃபி மரக்கட்டைகள். இயல்பாகவே முண்டும் முடிச்சுகளுமாக வளர்ந்து வருபவைதான் இந்த 'ரொபெஸ்டா' காஃபி மரங்கள்.

"காஃபி மரத்தோட பதினைஞ்சு வருசமா உறவாடி வர்றேன். காஃபி செடிகள்ல மொத்தம் ஒன்பது வகை இருக்கு. 'ரொபெஸ்டா'னு ஒரு வகை மட்டும்தான் கலைப்பொருட்கள் ஆகுது.

முண்டு முடிச்சுகளோட சேர்ந்து வளர்றது இது ஒண்ணு மட்டும்தான். வயசு ஆக ஆக அதனோட முண்டு முடிச்சுகள் பலவித வடிவங்கள்ல வளர்ச்சி அடைஞ் சுக்கிட்டே இருக்கும். கூர்ந்து கவனிக்கும்போது கலை வடிவங்களா நம் கண்ணுக்குத் தெரியும்" என்கிறார் மணிகண்டன்.

"ரொபஸ்டா காஃபி மரக்கட்டை, கலைப்பொருளா உருவாக ரொம்ப நாளாகும். அம்பது வயசுக்கு மேலான காஃபி மரங்களை, தோட்டத்துக்காரங்க வெட்டிப் போட்டுடுவாங்க. அதுல நமக்குத் தேவையான மரங்களை சைசு வாரியா பிரிக்கணும். சிலவற்றைப் பார்த்ததுமே அதுல ஏதோ ஒரு உருவம் தெரியும். வேற சில





# கலைவண்ணம்!

கட்டைகளை நாம கொஞ்சம் செதுக்கினா ஒரு உருவம் வந்துடும்.

நமக்கு வேண்டிய அளவுக்கான துண்டுகளை வெட்டிக்கணும். பரந்த வெயில்ல ஒரு மாசம் காயவைக்கணும். நல்லா காய்ஞ்சதும் தண்ணீர்ல தண்ணிக் குள்ளார ஒரு மாசம் ஊறப்போடணும். பிறகு பதினைஞ்சு நாள் நல்ல நிழல்ல உலர்த்தணும். அப்ப அதனோட மரப்பட்டைகள் தானாகவே கழண்டு உதிர ஆரம்பிக்கும். நாமளும் மரக்கட்டை ஏதும் காயம்படாம பட்டைகளை உரிக்கணும்.

ஓட்டைச் சந்துல எல்லாம் சாக் பவுடர் வைச்சு மூடணும். நமக்கு என்ன வடிவம் வேணுமோ அதை உருவாக்கிட்டு, பாலிஷ் பண்ணணும். சீல்நேக் பாலிஷ் அடிக்கணும். இப்ப நாம விரும்பற வடிவத்துல கலைப்பொருட்கள் ரெடி!'' என்கிறார்.

''விநாயகர், வீர ஆஞ்சநேயர் வடிவமைச்சிருக்கேன். டி.வி. ஸ்டாண்ட், கூட்ட அரங்கு கலைப்பொருட்கள், டீப்பாய், முக்காலி, டெலிபோன் ஸ்டாண்ட், செல் ரீசார்ஜ் ஸ்டாண்ட், பேப்பர் வெயிட் எல்லாம் செஞ்சு குடுத்திருக்கேன். இந்தக் கலைப்பொருட்கள் மீது தண்ணீர் படாம பார்த்துக்கணும். பட்டாலும் பனியன் துணி கொண்டு உடனே துடைச்சுடணும். ரெண்டு வருஷத்துக்கு ஒரு தடவை பாலிஷ் பண்ணினா போதும். காலத்துக்கும் கிடக்கும்.

ஐந்நூறு ரூபாய்லேர்ந்து பத்தாயிரம் ரூபாய் வரைக்கும் கலைப்பொருட்கள் இருக்கு. இங்கேர்ந்து சென்னைக்கு, சில இடங்களுக்கு பார்சல்ல அனுப்பிச்சுருக்கேன். விரும்புறவங்களுக்கு எந்த ஊராக இருந்தாலும் நேரா கொண்டு போயி டோர் டெலிவரியும் கொடுக்கிறேன்!'' என்கிறார் தாண்டிக்குடி மணிகண்டன்.

செய்தி, சித்திரம்:
**ஸ்ரீரங்கம் திருநாவுக்கரசு**



★ மணிகண்டன்





# கிட்டாங்கி எண் 13

**செய்தி - இலங்கை, மே 29, 1958**

**நாடு முழுவதும் தமிழருக்கெதிரான இனக்கலவரத்தை சிங்களவர் ஏற்படுத்தினர். இக்கலவரம் மே 26, 27, 28ஆம் திகதிகள் வரை நீடித்திருந்தது. இதனைத் தொடர்ந்து ஆயிரக்கணக்கான தமிழர்கள் அகதிகள் முகாமுக்குள் புகுந்துகொள்ள நேர்ந்தது.**

**('வீரகேசரி')**

சுகவனம் பிள்ளையை வெறிக்கும்பல் ஒன்று ஆயுதத்துடன் தாக்க எதிர்ப்பட்டது. 'அடிங்க கொல்லுங்க' என்று சிங்களத்தில் கத்திக்கொண்டே அவர்கள் முன்னேறி வந்துகொண்டிருந்தார்கள். கிட்டங்கியில் சாமான்களை இறக்கிவிட்டு புது சரக் கெடுக்க ஊருக்குள் நுழைகையில் ஏதோ பிரச்னை. வழமையாகக் காணப்படும் மக்கள் யாரும் காணக் கிடைக்கவில்லை. அங்காடித் தெருவே மயானம் போல யாருமற்றுக் கிடந்தது. சுகவனத்துக்கு என்ன செய்வதென்று விளங்கவில்லை. எங்கிருந்தோ வந்த ஜீப் ஒன்று அவரை உள்ளிழுத்து வேகமாக புகை கக்கியபடி அவ்விடத்தை விட்டகன்றது. சுகவனத் துக்கு தனக்கு என்ன நடக்கிறது என்பதை அவதானிக்க முடியவில்லை. சற்று ஆசு வாசப்படுத்திக் கொண்டு பார்த்தால் திருக் குமரன்தான் அவரைக் காப்பாற்றியது.

நெல்லையைச் சேர்ந்த சுகவனம் பிள்ளைக்கு கொழும்புத் துறைமுகத்தில் கிட்டங்கி எண் 13 SV சொந்தம். இங்கிருந்து வெங்காயம், உருளைக் கிழங்குகளை ஏற்றுமதி செய்வதும், அங்கிருந்து கிடைக்கும் பொருட்களை இங்கே இறக்குமதி செய்வதும்தான் வியாபாரம். பதினைந்து வயதில் இதை



உமா ஷக்தி

# ப்ளாக் அண்ட் வொயிட் கதைகள்-12

ஆரம்பித்தவர், கடந்த எட்டு ஆண்டு களாகக் கொடிகட்டிப் பறக்கிறார்.

தற்போது அனுப்பியிருந்த சரக்கு மொத் தமும் நடுக்கடலில் பெரும் மழையால் அழுகிவிட்டதால் என்ன செய்வது என்று குழம்பிப் போயிருந்தார். கையிருப்புப் போதவில்லை என்று சிலோன் வங்கி யொன்றில் வட்டிக்குப் பணம் வாங்கி யிருந்தார். பாங்க் மேனேஜரிடம் என்ன பதில் சொல்வது என்று செயலற்று நின்ற தருவாயில் தக்க சமயத்தில் வந்து சேர்ந் தான் பாங்க் மேனேஜர் திருக்குமரன்.

''நன்றி குமரன். சரியான சமயத்துல வந்துட்டீக. இல்லன்னா இந்தக் காட்டுப் பயலுவ கையில மாட்டியிருப்பேன்.''

''அது இருக்கட்டும் பிள்ளை. வட்டி ஏறிக்கொண்டே போகுது ஐயா... லோனை எப்ப திருப்பிக் கட்டப் போறீங்கள்?'' என்று கேட்டபடி பிள்ளைவாளின் முகத்தை ஏறிட்டுப் பார்த்தான் திருக் குமரன்.

''அதைத்தாம்லே நானும் யோசிச்சிட்டி ருக்கேன்.''

''இப்படியே விட்டால் முதலுக்கு மேலாலை வட்டி வளந்திடும். எவ்வளவு கெதியாக லோனைக் கட்டமுடியுமோ கட்டிப் போடுங்கோ'' என்றான் அவன் கண்டிப்பான குரலில்.

''நீங்க எனக்கு ஒரு உதவி செய்யணும்.

உம்மடை பாங்கிலிருந்து எனக்கு இருபத்தி அஞ்சாயிரம் லோன் எடுத்துத் தாரும். முதல்ல வாங்கின பணத்தையும் சேர்த்து ஒரு மாசத்துல அடைச்சிடுவன். சரியா?''

''என்ன ஐயா கதைக்கிறீங்கள்? கடனைக் கட்டுங்கோ என்டால்... அதுக்கும்



மேலாலை கடன் கேக்கிறீங்கள்...''

''எங்கட திறமையைப் பத்தி உங்களுக்குச் சந்தேகம் வேண்டாம் குமரன். யோசிச்சி செய்யுங்க. இந்த உதவியை நான் மறக்கமாட்டன்.''

தீர்க்கமான சிந்தனை மற்றும் வாக்குறுதிகள். வற்புறுத்தல்களின் பிற்பாடு திருக்குமரன் கடன் வழங்கச் சம்மதித்தான்.

**சுகவனம் போன்றவர்கள் காலத்தின் தேர் போன்றவர்கள். சிலசமயம் அச்சாணி முறிந்துவிட்டால் தேர் என்பது இல்லாமல் போகுமா என்ன?**

பணத்தை வாங்கி பொம்மைகள் மற்றும் பால் டின் ஆகியவற்றை கொழும்பிலிருந்து தூத்துக்குடிக்கு இறக்கு மதி செய்து அதை திருநெல்வேலி, சென்னைக்கு அனுப்பி நல்ல லாபம் சம்பாதித்தார். சொன்ன தேதியில் திருக்குமரனின் கடனை அடைத்தார். வாக்குத் தவறாத சுகவனம் பிள்ளை என்ற பெயரெடுத்து நெல்லைக்குப் புறப்பட்டார்.

ஆயாசமாக இருந்தாலும் அதீத உற்சாகத்துடன் கம்பராமாயணத் தெருவிலிருக்கும் தன் வீட்டை அடைந்தார். மகன்கள் முத்துலிங்கமும் சண்முகமும் அவரைப் பார்த்து ஓடோடி வந்து மேலே விழுந்தார்கள். அவர்களை தூக்கிக்கொண்டார் சுகவனம்.

''ஏலே அவுகளே களைச்சு வந்திருக்காக. தொந்திரவு செய்யாதீக'' என்ற பேராச்சி அவர் வாங்கி வந்திருந்த பண்டங்களைப் பங்கு பிரித்துக் கொடுத்தாள்.

அதன் பின் கொழும்பு போக்குவரத்து அதிகப்படியானதால் சுகவனம் சிலோனில் தனி வீடு எடுத்துத் தங்க ஆரம்பித்தார். மனைவி மக்கள் நெல்லையிலே இருக்க, காடாறு மாதம் நாடாறு மாதமாய் நெல்லையிலும் சிலோனிலும் கழித்தார்.

சரக்கைக் கப்பலில் ஏற்றிக்கொண்டு ஒரு புது வியாபார விஷயமாக கொழும்புக்குப் பயணம் செய்தார்.

கொழும்புத் துறைமுகம் நெருங்கிவிட்டது. கப்பலில் இருந்து இறங்கி சிறிய படகொன்றில் ஏறிக்கொண்டார். கரை ஓரம் படகை நிறுத்திய துடுப்பு போடுபவர்கள், படகின் கொக்கியைப் பிடித்துக் கொள்ள பிள்ளை பைய இறங்கினார்.

ஏஜெண்டுகள் அவரை மொய்த்துக் கொண்டார்கள்.

''விஷயம் கேள்விப்பட்டீரா பிள்ளைவாள்? சிறீலங்காவுல உணவுப்

பொருட்கள் கடும் தட்டுப்பாடு. வெங்காயம் உருளைக்கிழங்கையும் இங்கட மக்கள் பாத்து நாளாச்சு. இப்பம் நீங்க சொல்றது தான் இஞ்ச விலை. ஒண்ணுக்குப் பத்தா விலையை நிர்ணயம் செஞ்சு கொள்ளை லாபம் பாத்திடலாம், என்ன சொல்லுதீரு?'' என்றார்கள்.

''கப்பல் புறப்படறப்ப என்ன விலை சொன்னேனோ அதேதான் இப்பமும். அப்படி மனுசத் தன்மையில்லாம பணத்தைச் சம்பாதிச்சு ஆகப்போகறது என்ன? கொடுத்த வாக்கு சாமி மாதிரி. அதுல எந்த மாத்தமும் இல்லை'' என்றார். அவரை அனைவரும் மலைப்பாய்ப் பார்த்தனர். சிலர் 'பொழைக்கத் தெரியாத வியாபாரி' என்று ஏசி கேலி செய்தார்கள்.

**உ**ருண்டு சென்ற காலம் பிள்ளையின் வெற்றி வாழ்க்கையில் திடீரென்று இறக்கத்தை ஏற்படுத்தியது.

''பிள்ளைவாள் உம்ம கப்பல் கவிழ்ந்திருச்சாம், சிலோன்லேர்ந்து இப்பம்தான் தகவல் வந்திருக்கு.''

''என்ன சொல்லுதீரு கணபதி?''

சுகவனம் பிள்ளை ஒரு நொடி இடிந்து போனார். கிட்டத்தட்ட எண்பதாயிரம் மதிப்புள்ள சரக்கு. ஆனால் விதி இப்படியாக இருந்தால் என்ன செய்வது? எல்லாம் அவன் செயல் என்று நினைத்துக் கொண்டே பூஜை அறைக்குள் சென்றார். நமச்சிவாய மந்திரத்தை ஜபித்துவிட்டு சிறிது நேரம் கழித்து வெளியே வந்தார். அதற்குள் விஷயம் பரவி துக்கம் விசாரிக்க உறவினர்கள் கூடிவிட்டார்கள். அனைவரும் அவர் இந்த இழப்பை எப்படித் தாங்கப் போகிறார் எனக் கவலைப் பட்டார்கள்.

சென்ற முறை ஏற்பட்ட நட்டம் போலல்லாமல் இப்போது மிகப்பெரிய பேரிடி. விழுந்து எழ முடியாத அளவுக்கு.

## அலை... ஆதவன்... அய்யன்

குமரி மாவட்டம் திருக்குறளூரில் (பழைய பெயர்: லீ புரம்) உள்ள அமைப்பு 'திருவள்ளுவர் அறக்கட்டளை.' இதன் தலைவர் மா.செ. தமிழ்மணி. ஒவ்வொரு தமிழ் மாதத்தின் முதல் நாளும் விடியற்காலையில் இவ்வமைப்பைச் சார்ந்தவர்கள் கன்னியாகுமரியிலுள்ள திருவள்ளுவர் சிலை முன்பு கூடி 1330 குறள்களையும் வாசிப்பர். கடந்த வைகாசி முதல் நாளில் இந்த அறக்கட்டளையின் உறுப்பினர்களான திருப்பதி - தென்மொழி செல்வியின் திருமணம் நடைபெற்றது. ஆதவன் உதிக்கும் வேளையில் அய்யனை சாட்சியாகக் கொண்டு மந்திரங்களாக திருக்குறள் ஒலிக்க நடந்த திருமணத்துக்கு அலைகளே மங்கள இசை எழுப்பின. இந்த வித்தியாசமான திருமணம் சுற்றுலாப் பயணிகளைக் கவர்ந்தது.

- த.இ.தாகூர்



ஆனால் என்ன செய்ய? ''இதுவும் கடந்து போகும். மண்ணுல கிடைச்சது கடல்ல போச்சு. அடுத்த சோலியைப் பாக்காம அழுது புலம்பாதீங்க'' என்று சொல்லிவிட்டு, கோயிலுக்குக் கிளம்பிப் போய்விட்டார் சுகவனம்.

சுகவனம் போன்றவர்கள் காலத்தின் தேர் போன்றவர்கள். சிலசமயம் அச்சாணி முறிந்து நின்றுவிட்டால் தேர் என்பது இல்லாமல் போகுமா என்ன?

வாவ்வாசகர்

# இனிப்புப் பாலம்



ரகுராமன் மனைவியுடன்...

''எப்பொழுதும் போல் சோம்பேறித்தனமாக விடிந்த ஜூன் மாதம் 7-ஆம் தேதி ஞாயிற்றுக்கிழமை, என் நண்பர் கிரிவாசனிடம் இருந்து ஃபோன் வந்தது. 'புதிய கல்கியில் (14.6.2009) லால்குடி நாராயணன் பேட்டி வந்துள்ளது. அதில் உங்களைப் பற்றி தகவல் வந்துள்ளது' என்றார். பின்பு எப்பொழுதும் போல் நான் கல்கி வாங்கி, வாவ் வாசகர் (எங்கே இருக்கிறாய் ரகுராமா?) பகுதியைப் படித்தேன். அதன் பின் நண்பர் கிரிவாசன் மூலமாக ஃபோன் நம்பர் பெற்று என் பழைய நண்பர் நாராயணனிடம் பேசினேன்'' என்கிறார் மயிலாப்பூரில் வசிக்கும் ரகுராமன்.

''நான் ஸ்டேட் பாங்க் பணியிலிருந்து மாறி இரண்டு ஆண்டுகளாக ஒரு சாஃப்ட்வேர் நிறுவனத்தில் பணிபுரிகிறேன். வேலை, மொபைல் எண் மாற்றம், குடும்பச் சூழ்நிலை, அதிகப் பயணங்கள் காரணமாக, பழைய நண்பர்களிடம் தொடர்பு கொள்ள முடியாமல் போய்விட்டது. இந்தச் சூழ்நிலையில் கல்கி மூலம் மீண்டும் பழைய நட்பு மலர்ந்தது இனிய அனுபவம்.

முன்பு கல்கியில் பாலம் என்று ஒரு பகுதி வந்து கொண்டிருந்தது. அதை ஏன் நிறுத்தி விட்டீர்கள் என்று நினைவில்லை. ஆனால், 'வாவ் வாசகர்' பகுதியால் மீண்டும் பாலம் படித்த உணர்வு ஏற்பட்டது. கல்கி கொடுத்தது இணைப்புப் பாலம் அல்ல. அது ஒரு இனிப்பான பாலம்'' என்று நெகிழ்கிறார்.

இவரது மனைவி சௌம்யாவும் தீவிர கல்கி வாசகி. திருமணமான ஆரம்பக் காலம் முதல் இப்போது வரை கல்கியைப் படித்துவிட்டு அதில் வரும் கதை, கட்டுரைகளைக் குறித்து நீண்ட நேரம் விவாதிப்பார்களாம். ஒரே மகள் சம்யுக்தா.

''நான் முதன் முதலில் படிச்ச த்ரில்லர் கதையே கி.ராஜேந்திரன் அவர்களின் 'சைக்கோ சாரநாத்' தொடர்தான். அதே போல் சுஜாதாவின் மத்திமர் கதைகள் என்னைக் கட்டிப் போட்டவை. இதெல்லாம்தான் நாமும் கதை எழுத வேண்டும் என்ற ஆர்வத்தைத் தூண்டின. நண்பன் நாராயணனுடன் சேர்ந்து அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப் போட்டியில் கலந்து கொண்டேன்'' என்கிறார் ரகுராமன்.

கடைசியாக, ரகுராமன் வைத்த கோரிக்கை, ''மறுபடியும் பாலம் பகுதியை ஆரம்பிங்க. எனக்குப் பழைய நண்பன் கிடைச்ச மாதிரி மத்தவங் களுக்கும் கல்கி 'பாலம்' அமைக்கட்டும்.'' ●

காதைக் கொடுங்க

# ராஜா ராஜாவா?



ஸ்பெக்ட்ரம் (2ஜி) தொழில் நுட்பத்தை ஏலம் விட்டதில் ஏற்பட்ட மிகப்பெரிய சர்ச்சையைத் தொடர்ந்து, லேட்டஸ்ட் 3ஜியை ஏலம் விடுவதில் மிகவும் உஷாராக இருக்கிறாராம் பிரதமர். இது தொடர்பாக மத்திய அமைச்சர் என்ற முறையில் ராஜாவுக்குரிய சில உரிமைகளைப் பற்றிக் கவலைப்படாமல், ஏலம் குறித்தும் ஏலம் முடிந்த பின்னர் முடிவெடுத்து அமைச்சரவைக்கு விஷயங்களை வைக்கவும், நிதி அமைச்சர் பிரணாப் முகர்ஜி தலைமையில் ஒரு குழுவை நியமித்துவிட்டார் பிரதமர். இது ராஜாவுக்கு சரியான அதிர்ச்சி என்கிறார்கள். சிதம்பரம், ஏ.கே. ஆண்டனி, கபில் சிபல் ஆகியோருடன் இந்தக் குழுவில் ராஜாவும் இருக்கிறார். அவர் தனித்து ஏதும் முடிவெடுக்க முடியாது. குறைந்தபட்ச ஏலத் தொகையை இந்த அமைச்சர்கள் குழுதான் முடிவு செய்யும். 3ஜி மூலம் மத்திய அரசுக்கு 30,000 கோடி ரூபாய் வருமானம் வரும் என்பது எதிர்பார்ப்பு. (அரசியல்வாதிகள் பாக்கெட்டுக்கு எவ்வளவு போகுமோ?) தகவல் தொடர்புத்துறையில் நடக்கும் விஷயங்களைத் தெரிந்து கொள்வதில் அழகிரியும், தயாநிதியும் ஆர்வம் காட்டுவதாகச் சொல்கிறார்கள்.

**பா.ம.க.** மற்றும் தங்கபாலு தேர்தல் தோல்வியைத் தொடர்ந்து மக்கள் தொலைக் காட்சியும், மெகா தொலைக்காட்சியும் தில்லியிலிருந்து தங்கள் நிருபர்கள் மற்றும் கட்டமைப்பை வாபஸ் வாங்கிவிட்டன. ஆனால், கலைஞர் தொலைக்காட்சி தன்னை தில்லியில் பலப்படுத்திக் கொண்டுள்ளது. ஜெகத் ரட்சகன் தகவல்-ஒளிபரப்பு அமைச்சரான பிறகு 'கலைஞர் ஏஷியா' என்ற வெளிநாடு வாழ் தமிழர்களுக்கான பொழுதுபோக்கு சேனலுக்கு அனுமதி வாங்கிவிட்டார்கள். தி.மு.க. ராஜ்யசபை உறுப்பினர் ஜின்னாவின் வீட்டில் தற்காலிகமாக கலைஞர் தொலைக்காட்சி அலுவலகம் அமைக்கப்படுகிறது.

"**தே.மு.தி.க.**வைத் தனியாக 'நிறுத்தி' வாக்குகளைப் பிரித்து வெற்றி பெற்றுவிட்டோம். இனி சட்டமன்றத் தேர்தலுக்கு முன் தே.மு.தி.க. என்ற இயக்கத்தையே ஒன்றுமில்லாமல் செய்துவிடவேண்டும். ஏனென்றால் அது இருப்பதால்தானே காங்கிரஸ்காரர்களுக்கு 'சாய்ஸ்' இருக்கிறது'' என்கிறார் ஒரு தி.மு.க. பாராளுமன்ற உறுப்பினர். மதுரையில் இந்த வேலை தொடங்கிவிட்டதாம். மதுரை தே.மு.தி.க. பிரமுகர் பொடா நாகராஜன் தலைமையில் முக்கியப் பிரமுகர்கள் விலகி அழகிரியோடு ஐக்கியமாகி விட்டார்கள். இனி எல்லா மாவட்டங்களிலும் 'இழுப்பு வேலை' தொடருமாம்.

- ஸ்ரீநி

## சிலபஸ்ல இல்லாத சப்ஜெக்ட்




''படுத்துக் கொண்டே ஜெயிப்பேன்'' என்ற வார்த்தையைக் கேட்டவுடன் நமக்கு நினைவுக்கு வருபவர் படிக்காத மேதை காமராஜர்தான். தளராத உழைப்பும் தன்னம்பிக்கையும்தான் அப்படி உறுதியான சொற்களைச் சொல்ல வைக்கின்றன. அப்படியானால் படுத்துக் கொண்டே ஜெயிக்கலாம் சரி! சிரித்துக் கொண்டே ஜெயிக்கலாமா?

ஒருமுறை ஒரு நண்பர் என்னிடத்தில் கேட்டார்: ''ஒரு வகுப்பறையில் எத்தனை பேருக்கு நீங்கள் பாடம் நடத்துவீர்கள்?''

நான் உடனே, ''பி.ஏ வகுப்பாக இருந்தால் 40 பேர், எம்.ஏ வகுப்பாக இருந்தால் 20 பேர் எதற்காகக் கேட்கிறீர்கள்? என்று தொடர்ந்து கேட்டேன்.

''ஒண்ணுமில்ல அந்த 40 பேரும் இந்த 20 பேரும் ஏன் ஒரே மாதிரி மார்க் வாங்கறதில்ல? முதலாவது, இரண்டாவது, மூணாவது, ஃபெயிலு என்று ஆகுறாங்களே ஏன்?'' என்று அவர் கேட்டுவிட்டு வெற்றிலை போட ஆரம்பித்தார்.

இந்தக் கேள்வியால் திகைத்துப்போன நான், சற்று யோசித்துவிட்டுத் தொடங்கினேன். ''ஓட்டப்பந்தயத்தில ஓடுற யாருமே மூணாவது பரிசு வாங்கணும்னோ, இல்ல தோத்துப்போயிருவோம்னோ நினைச்சு ஓட்டத்தைத் தொடங்கறதில்ல. ஆனா, எல்லாருமே முதல்ல வர்றதில்ல ஏன்?'' என்று நான் கேட்க,

''நல்லாருக்கே! என் கேள்விக்குப் பதில் சொல்லுவீங்கனு பார்த்தா எதிர்க் கேள்வி கேட்டா எப்படி?'' என்று கவலையோடு கேட்டார்.

''அதிகமா கவலைப்படாதீங்க... வகுப்பிலேயே கூட ஒரு கேள்வியை நானே கேட்டுட்டு, அதுக்கு நானேதான் பதில் சொல்லுவேன். ஒரு பையனோட அப்பா, பையனைப் பார்த்துக் கேட்டாராம். 'உங்க வகுப்பிலேயே நல்லா படிக்கிறது யாரு?' அவன் சொன்னான். 'எங்க



# சிரிப்போம் ஜெயிப்போம்!

# கு.ஞானசம்பந்தன்



வாத்தியாரு'. அதுமாதிரி கேள்வி கேட்ட நானே பதில் சொல்றேன் கேளுங்க. நான் என்னதான் சொல்லிக் கொடுத்தாலும் ஜெயிக்கணும்ங்கிற நம்பிக்கை அந்த மாணவனுக்கு வரணும்.

பெரும்பாலான கல்வி நிலையங்கள்ல கல்விதான் சொல்லித் தருகிறோமே தவிர தன்னம்பிக்கையைச் சொல்லித்தருவது இல்ல. ஏன்னா அது எங்க 'சிலபஸ்'ல இல்ல'' என்று நான் சொல்லிமுடிக்கும் முன், ''நம்பிக்கை மட்டும் இருந்தா ஜெயிச்சிட முடியுமா?'' என்று அவர் விடாமல் தொடர்ந்தார்.

''சரி! இப்படி வச்சுக்குவோம். ஒரு பெண் ஞானிட்ட போயி ஒரு சீடன் கேட்டானாம் 'கங்கைல பெரிய வெள்ளம் வர்றப்ப ஆடு, மாடு, குதிரை... ஏன்? யானையைக் கூட அந்த வெள்ளம் அடிச்சிட்டுப் போயிடுது. ஆனா ஒரு சாதாரண கெண்டை மீனு அந்தத் தண்ணிய எதிர்த்து நீந்திப் போகுதே! யானையை இழுத்துப் போகிற கங்கை நதி, மீன் குஞ்சை எதிர்த்து நீந்த விடுறது எதனால?' என்று கேட்டானாம்.''

''போச்சுடா! அவனும் கேள்விதான் கேட்டானா?'' என்று அலுத்துக் கொண்ட அவர், இன்னொரு வெற்றிலையை வாய்க்குள் திணித்தார். ''இருங்க... அதுக்கு அந்த அம்மா என்ன சொன்னாங்க தெரியுமா? 'கங்கை வெள்ளம் அடித்துக் கொண்டு போகின்ற ஆடும், மாடும், குதிரையும், யானையும் தண்ணீருல இருந்து வெளியில வந்தா இறந்து போகாது. ஆனா மீன் குஞ்சோ தண்ணியைவிட்டுப் பிரிந்த ஒரு சில நிமிடத்துல



உயிரை விட்டுடும். தண்ணிதான் தனக்கு உயிருன்னு அந்த மீன் நீரை நம்பி வாழுது. தண்ணீரும் தன்னை நம்புகிற மீனை எதிர்த்துப் போக அனுமதிக்குது. இதுதான் இயற்கை நியதி. நம்பிக்கையோட எதிர் நீச்சல் போட்டா மீனைப்போல வாழலாம். தன்னம்பிக்கை தளர்ந்துபோனா யானையா இருந்தாலும் தண்ணிலதான் போகணும்'' என்று நான் சொல்லி முடிக்கவும். ''எப்படி? நான் கேட்டவுடனே இப்படி ஒரு பதிலை யோசிச்சுச் சொன்னீங்க?'' என்று அவர் வியப்போடு கேட்டார்.

''இது நான் சொன்ன பதில் இல்ல.




இராமகிருஷ்ண பரமஹம்சரின் துணைவியாரான சாரதாதேவி அம்மையார் சொன்னது'' என்றேன் நான்.

''சரி இருந்தாலும் அவங்க எல்லாருமே முதல் மார்க் வாங்கிருக்கலாம்ல?'' என்று அவர் மீண்டும் முதலிலிருந்து தொடங்க, நான் இடைமறித்து, ''இந்த பாருங்க! அவங்க ஜெயிக்கணும்னு நான் நினைக்கறதப்போல, 'நாம ஜெயிக்கணும்'னு அவங்களும் நினைக்கணும். இந்திய கிரிக்கெட் மேட்சுல டெண்டுல்கர் 98 ரன் எடுத்த உடனே, 'இன்னும் 2 ரன்னு, இன்னும் 2 ரன்னு கடவுளே! அவர் 100 ரன் அடிச்சுட்டா எங்கப்பாவுக்குக் கூட மொட்டையடிக்கிறேன்' அப்படினு வேண்டிக்கிற நம்ம மாணவர்கள் 90 மதிப்பெண் வாங்கியபோது 100க்கு 100 வாங்கிருக்கலாமே என்று கவலைப்பட வேண்டாமா? ஒண்ணு நினைவு வச்சுக்குங்க! தன்னம்பிக்கை கொண்டவன்தான் தரணியாளுவான்'' என்று நான் சொல்ல,

''ஏன்? பரணி நட்சத்திரத்தில பிறந்தவன் தரணியாளுவான்னு சொல்லுவாங்களே'' என்று அவர் இழுக்க...

''அதுவும் ஒரு நம்பிக்கைதான். சிரிக்க வச்சே உலகத்தை ஜெயிச்ச நடிகரும் இருந்தாரு. உங்களுக்குத் தெரியுமா?''

''தெரியுமே! சார்லி சாப்லின்?''

''சரியாச் சொன்னீங்க! அப்படி சிரிக்க வச்சே ஜெயிச்ச, தமிழகத்தில பிறந்த இன்னொரு நகைச்சுவை நடிகரைத் தெரியுமா?'' என நான் கேட்க ''தெரியுமே! கலைவாணர் என்.எஸ்.கிருஷ்ணன்தானே'' என்று சொல்லிவிட்டு அவர் சிரித்த சிரிப்பில் அந்தப் பகுதியே வெற்றிலையால் சிவப்பானது.

என்னிடத்தில் கேள்வியாகவே கேட்டுக் கொண்டிருந்த அவர், என் கேள்விகளுக்குப் பதில் சொல்லிச் சிரித்தார். அவர் சிரிக்க... நான் ஜெயித்தேன்...!

**(வெற்றி தொடரும்)**

# அம்மையப்பன்

அருள்வாக்கு

நம் அப்பாவையும் அம்மாவையும் ஸ்வாமியாக நினைக்க வேண்டும்.

இதையே மாற்றி ஸ்வாமியையும் அப்பா அம்மா என்ற உருவங்களில் நினைக்க வேண்டும்.

'கொன்றை வேந்தன்' என்ற நீதி நூலில் ஔவைப் பாட்டி முதலில் 'அன்னையும் பிதாவும் முன்னறி தெய்வம்' என்கிறாள். இது தாய் தந்தையரைத் தெய்வமாக நினைப்பது. இதை அடுத்தே 'ஆலயம் தொழுவது சாலவும் நன்று' என்கிறாள். 'ஆலயம் தொழுவது' என்றால் ஆலயத்திலுள்ள தெய்வத்தைத் தொழுவதேயாகும். அப்படித் தொழும்போது அத்தெய்வத்தையே தாய் தந்தையர் என அன்புடன் எண்ண வேண்டும்.

ஸ்வாமி எல்லா இடங்களிலும் இருக்கிறார் என்றால் அவருக்கு நம்மைப் போல் உருவம் இருக்கமுடியாது. ஆனால் உருவம் இல்லாத ஒருவரை எப்படி நினைப்பது? அதனால் அவரை அப்பா அம்மா என்ற இரு உருவங்களில் நினைக்க வேண்டும். நமக்குத் தெரிந்தவர்களில் நம்மிடம் ரொம்ப அன்பாக இருப்பது தாய், தந்தையர்தானே? அன்பாக இருப்பவர்களை நினைத்துக் கொண்டால்தான் நமக்கும் சந்தோஷமாக இருக்கிறது. அதனால் ஸ்வாமியை அம்மாவாக, அப்பாவாக, இரண்டும் சேர்ந்த அம்மையப்பனாக நினைத்து, பக்தி செலுத்தவேண்டும்.

பார்வதி என்ற அம்மாவாகவும், பரமசிவன் என்ற அப்பாவாகவும் அவர் ஆகியிருக்கிறார்; லக்ஷ்மி என்ற அம்மாவாகவும் மஹாவிஷ்ணு என்ற அப்பாவாகவும் ஆகியிருக்கிறார்; சீதை என்ற அம்மாவாகவும் ராமர் என்ற அப்பாவாகவும் ஆகியிருக்கிறார்.

இந்த உருவங்களை நினைத்துக் கொண்டாலே அன்பாக இருக்கிறது. சந்தோஷமாக இருக்கிறது.

– ஜகத்குரு காஞ்சி காமகோடி
ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சார்ய ஸ்வாமிகள்



# க்ரைம்.காம்

## தமயந்தி தற்கொலை



**ஜி.**எம். பர்வதவர்த்தினி ஃபிளாஸ்கில் இருந்த காப்பியை கண்ணாடி தம்ளரில் ஊற்றிக் கொண்டிருந்த போது, டெஸ்பாட்ச் ராகவன் கதவைத் தட்டி விட்டு உள்ளே வந்தான்.

''குட்மார்னிங் மேடம்...''

குட்மார்னிங்கைப் புறக்கணித்தாள் பர்வதவர்த்தினி. ''என்னாச்சு அந்த ப்ராஜக்ட் ஃபைல்? ரெண்டு நாளா கேட்டுக்கிட்டு இருக்கேன். ஃபைலைக் கண்டு பிடிச்சீங்களா இல்லையா...?''

''ஸாரி மேடம். அந்த ஃபைலைத் தேடிக் கண்டுபிடிக்கிற பொறுப்பை ப்ரோக்ராமர் தமயந்திகிட்டே கொடுத்திருந்தேன். அந்தப் பொண்ணு இன்னைக்கு ஆபீஸுக்கு வரலை.''

''லீவுக்கு அப்ளை பண்ணியிருந்தாளா...?''

''இல்ல மேடம். ஃபோன் பண்ணியும் சொல்லலை.''

''சரி... தமயந்தி வரலைன்னா என்ன? நீங்க அந்த ஃபைலைத் தேடிப் பார்க்கலாமே...?'' சொன்ன பர்வதவர்த்தினி காப்பி நிரம்பிய கண்ணாடி தம்ளரை எடுத்தாள். நேர்த்தியாய் அதை இரண்டு கைகளாலும் பிடித்துக் கொண்டு ஒரு வாய் உறிஞ்சினாள். ஆஃபிஸிலும் சரி; வீட்டிலும் சரி... அவளுக்கு எல்லாம் சரியாய், அழகாய் சுத்தமாய் இருக்க வேண்டும். இதன் காரணமாகவே பர்வதவர்த்தினிக்கு பிஸினஸ் வட்டாரத்தில் பர்ஃபெக்ட் பர்வதவர்த்தினி என்ற பெயரும் உண்டு.

''என்ன ராகவன்... யோசனை பண்றீங்க...? அந்த ஃபைல் எப்போ என் கைக்குக் கிடைக்கும்...?''

''எப்படியும் இன்னைக்கு சாயந்தரத்துக்குள்ளே...''

''நோ! நீங்க என்ன பண்ணுவீங்களோ ஏது பண்ணுவீங்களோ அந்த ஃபைல் இன்னும் ஒரு மணி நேரத்துக்குள் என் டேபிள் மேலே இருந்தாகணும்.''

த்ரில்லர்

''எஸ் மேடம்!'' ராகவன் சோர்வாய் தலையசைத்து விட்டு அறையினின்று வெளிப்பட்டான். நடந்தான். வராந்தாவில் பாதியைக் கடந்திருந்தபோது டைப்பிஸ்ட் மனோகரி எதிர்ப்பட்டாள்.

''என்ன ஸார்? மேடம் ரூமிலிருந்து ஃப்யூஸ்போன லைட் மாதிரி டல்லா வர்றீங்க..? இன்னிக்கு டோஸ் ஹெவியா?''

ராகவன் நெற்றியைப் பிடித்துக் கொண்டு அலுலாய்ப் பெருமூச்சு விட்டான்.



ராஜேஷ்குமார்

''அந்த 'கோல்டன் லைன்' ப்ராஜக்ட் ஃபைல் இன்னும் ஒரு மணி நேரத்துக்குள்ளே வேணுமாம். எனக்கு என்ன பண்றதுன்னே தெரியலை.''

''ஸார்... பழைய ரிக்கார்ட்லை ப்ரஸர்வ் பண்ணி வெச்சுருக்கிற ரிக்கார்ட் ஸ்டோர் ரூம்ல ஒருவேளை இருக்கலாம்.''

''அப்படீன்னா நீயே போய்த் தேடு மனோகரி. ப்ளீஸ். எனக்கு அர்ஜெண்டா வேற வேலை ஒண்ணு இருக்கு. கொஞ்சம் ஹெல்ப் பண்ணேன்.''

''டோண்ட் வொர்ரி ஸார்... நான் பார்த்துடறேன்.''

''தேங்க்யூ... மனோகரி...!'' ராகவன் ஒரு நிம்மதிப் பெருமூச்சோடு நகர்ந்தான்.

**ப**ழைய ரிக்கார்ட்ஸைப் பாதுகாப்பாய் வைத்திருப்பதற்காக, எப்



போதோ கட்டப்பட்ட அந்தக் கட்டடம் லேசாய்ச் சிதிலமடைந்து, பிரதான ஆபீஸ் கட்டடத்தில் இருந்து கொஞ்சம் தள்ளி, ஒரு பூவரசம் மரத்துக்குக் கீழே இருந்தது.

மனோகரி அந்தக் கட்டடத்தை நோக்கிப் போனாள். கனமான அந்தப் பெரிய கதவைத் தள்ளிக்கொண்டு உள்ளே நுழைந்தாள். பழைய மர அலமாரிகள் நிறைய ஃபைல்கள் நெருக்கியடித்துக் கொண்டு வருஷவாரியாய்த் தெரிய, 'இந்த ஃபைல் குப்பைக்குள் அந்த ப்ராஜக்ட் ஃபைலைத் தேடி எடுப்பதற்குள் பாதிப் பிராணன் போய்விடுமே!' புலம்பிக்கொண்டே அறைக்குள் காலடி எடுத்து வைத்தவள் அப்படியே அதிர்ந்து போய் ஆணியடித்தது போல் நின்றாள். பார்வை நிலைகுத்தியது. உடம்பு வியர்த்துக் கொட்டியது.

அறையை இரண்டாய்ப் பிரித்த கர்டரிலிருந்து கழுத்தில் சுற்றிய சுருக்குக் கயிற்றில் ஒரு நேர்க்கோடு மாதிரி சலனமில்லாமல் தொங்கிக் கொண்டிருந்தாள் தமயந்தி. கீழே ஸ்டூல் ஒன்று உருண்டு கிடந்தது.



''சாக்கடை வசதியை சீக்கிரம் செஞ்சு கொடுத்துடுங்க தலைவரே...''
''ஏன் என்னாச்சு?''
''நாம போற இடத்தில் எல்லாம் சாக்கடை சாக்கடைனு சொல்றாங்க!''
- தென்றல் சண்முகசுந்தரம்

**போ**லீஸ் ஹெட்க்வார்ட்டர்ஸ். க்யூப்ராஞ்ச் கட்டடத்தின் மூன்றாவது தளம். 'ரெட் செல்' எனப்படும் அந்த அறைக்குள் கமிஷனர் வைகுண்டராமனுக்கு முன்பாய் நின்றிருந்தாள் சாதுர்யா.

23 வயது. 5 அடி 6 அங்குல உயரம். 59 கிலோ எடையுள்ள ஒரு பெரிய ரோஜாப்பூ. க்யூப்ராஞ்சின் 'ஷேடோ ஸ்க்வாட்' பிரிவில் புதிதாய்ச் சேர்ந்த புயல். காவல் துறையில் பெரிய அளவில் எதையாவது சாதிக்க வேண்டும் என்று தினசரி கனவு காண்பவள்.

கமிஷனர் வைகுண்டராமன் சாதுர்யாவை உன்னிப்பாய்ப் பார்த்தபடி சொல்லிக் கொண்டிருந்தார்.

''சாதுர்யா...! இந்த 'ஷேடோ ஸ்க்வாட்' பிரிவில் நீ நிரந்தரமாய் ஓர் இடம் பிடிக்கணும்ன்னா டிபார்ட்மெண்ட் உன்கிட்டேயிருந்து நிறைய புத்திசாலித்தனத்தை எதிர்பார்க்கும். உன்னோட பயிற்சிக் காலம் சரியாய் ஒரு வருஷம். அதுக்குள்ளே தனித்திறமையை வெளிப்படுத்தி குற்றவாளிகளைக் கண்டு பிடிக்கணும். அது கொலை, கொள்ளை, பாலியல் பலாத்காரம், மோசடின்னு எது சம்பந்தப்பட்ட குற்றமாகவும் இருக்கலாம். இந்தத் தினத்திலிருந்து உன்னுடைய பயிற்சிக் காலம் ஆரம்பம்.

வேளச்சேரிக்குப் பக்கத்தில் விஸ்வரூப் பில்டர்ஸ்ன்னு ஒரு பெரிய கம்பெனியிருக்கு. அந்தக் கம்பெனியில் வேலை பார்க்கிற 'தமயந்தி' என்கிற பெண் ரிக்கார்ட்ஸ் ரூமில் தூக்குப் போட்டுக்கிட்டு செத்துப் போயிருக்கா. அந்த ஏரியா

''தலைவர் சோதனையைக் கூட சாதனையாக்கிடுவார்னு எப்படிச் சொல்றே?''

''வருமானவரிச் சோதனையில அவரு வீட்டுல கிடைச்ச அளவுக்கு இந்தியாவுல வேற எங்கேயும் கிடைக்கலையாம்!''

- வீ.விஷ்ணுகுமார்



பீட் இன்ஸ்பெக்டர் முரளிதரன் ஸ்பாட்டுக் குப் போய்ப் பார்த்துட்டு எனக்கு ஃபோன் பண்ணினார். 'தமயந்தி தற்கொலை பண் ணிக்கிட்ட மாதிரி தெரியலை... இட் ஸீம்ஸ்... டு... பி மர்டர்'ன்னு அவர் சந் தேகப்படறார். ஸோ... நீ இப்ப கிளம்பி அந்த ஸ்பாட்டுக்குப் போகணும். கேஸை இன்வெஸ்டிகேட் பண்ணணும். என்ன புறப்படறியா?''

''இதோ கிளம்பிட்டேன் ஸார்...''

''ஒரு விஷயம். இன்ஸ்பெக்டர் முரளி தரன் யூனிஃபார்மில் உத்யோகபூர்வமாய் தமயந்தி கேஸை டீல் பண்ணுவார். உனக்கு யூனிஃபார்ம் கிடையாது. ட்ரஸ் சென்ஸ் எப்படி வேண்டுமானாலும் இருக்கலாம். இன்ஸ்பெக்டர் முரளிதரன் உனக்கு உதவி பண்ணமாட்டார். பட் அவர் விசாரணை பண்ணின ஆட்களை நீயும் விசாரணை பண்ணலாம். உங்க ரெண்டு பேர்ல மொதல்ல யார் கேஸை முடிவுக்குக் கொண்டு வர்றீங்களோ அவங் களோட பெர்பாமென்ஸ் வில் பி ரிவார்டட். இந்த ஒரு வருட பயிற்சிக் காலத்தில் எவ்வளவு கேஸ்களை வெற்றி கரமாய் டீல் பண்றியோ அதைப் பொறுத் துத்தான் 'க்யூ' ப்ராஞ்சில் உன்னோட போஸ்ட் நிர்ணயம் செய்யப்படும். ஸோ... விஷ் யூ ஆல் த பெஸ்ட்!''

**சா**துர்யா 'விஸ்வரூப் பில்டர்ஸ்' அலு வலகம் போய்ச் சேர்ந்தபோது தமயந்தியை கீழே இறக்கி படுக்க வைத்திருந்தார்கள். கடைவாயில் ஒரு சிவப்பு நூல் போல் ரத்தக்கோடு தெரிய, அலுவலக ஊழியர் கள் இறுக்கமான முகங்களோடு நின்றிருந் தார்கள். அவளைப் பார்த்ததும் இன்ஸ்பெக் டர் முரளிதரன் அருகில் வந்தார்.

''பாடியைப் பார்த்துடறீங்களா...? போஸ்ட்மார்ட்டத்துக்குக் கொண்டு போக ணும்...''

''பத்து நிமிஷம் வெயிட் பண்ணுங்க... ப்ளீஸ்'' சொன்ன சாதுர்யா ரிக்கார்ட்ஸ் ரூமுக்குள் நுழைந்து கீழே படுக்க வைக்கப் பட்டிருந்த தமயந்தியை நெருங்கினாள். தமயந்தியின் தலையைத் தொட்டுத் திருப்பி கயிறு இறுக்கின தடத்தை, கழுத் தில் பார்த்தாள். பிறகு பக்கத்தில் நின் றிருந்த கான்ஸ்டபிளை ஏறிட்டாள்.

''பாடியை மொதல்ல பார்த்தது யாரு?''

''இதே ஆஃபீஸில் வேலை செய்யற மனோகரிங்கற பொண்ணு மேடம்.''

''அந்தப் பொண்ணைக் கூப்பிடுங்க.''

கான்ஸ்டபிள் போய் மனோகரியைக் கூட்டி வந்தார். அவள் அழுது அழுது

களைத்துப் போயிருந்தாள். சாதுர்யா கேட்டாள்.

''பாடியை மொதல்ல பார்த்தது நீங்க தானா?''

''ஆமா மேடம்...''

''நீங்க எதுக்காக இந்த ரூமுக்கு வந்தீங்க?''

விஷயத்தைச் சொன்னாள்.

''சம்பவம் நடந்திருக்கிற விதத்தைப் பார்த்தால் தற்கொலை மாதிரி தெரியுது. தற்கொலை பண்ணிக்கக்கூடிய அளவுக்கு தமயந்திக்கு ஏதாவது பிரச்னைகள் உண்டா?''

''எனக்குத் தெரியாது மேடம். தமயந்தி கொஞ்சம் ரிசர்வ்ட் டைப். யார் கூடவும் நெருங்கிப் பழகமாட்டா...''

''இந்த ஆஃபீஸில் மொத்தம் எத்தனை பேர் வேலை செய்யறாங்க?''

''அம்பத்தொன்பது பேர் மேடம்''

''அதுல பெண்கள் எத்தனை பேர்?''

''இருபத்து மூணு பேர்.''

''ஓ.கே. நீங்க போலாம்!'' மனோகரி வெளியேறிப் போக, சாதுர்யா மேலும் இரண்டு நிமிடங்கள் அந்த அறையில் இருந்துவிட்டு வெளியே வந்தாள். முரளிதரன் எதிர்கொண்டார்.

''பாடியை போஸ்ட் மார்ட்டத்துக்கு அனுப்பிடலாமா?''

''ஓகே! இனிமேல் நீங்க உங்க ஃபார்மாலிடீஸை கண்டினியூ பண்ணலாம். நான் இந்த ஆஃபீஸோட ஜி.எம்.மைப் பார்க்கணும்...''

ஜி.எம். அறை. சாதுர்யா பேச்சை ஆரம்பித்தாள்.

''மேடம்...! நீங்க என்ன நினைக்கறீங்க...?''

''இது தற்கொலைதான்னு என்னோட மனசுக்குப் படுது.''

''எதை வெச்சு அப்படிச் சொல்றீங்க..?''

''தமயந்திக்கு அடிக்கடி வயித்துவலி வரும். போன மாசம் மட்டும் நாலைஞ்சு தடவை லீவு போட்டிருக்கா. அதுவுமில்லாமல் தமயந்திக்குச் சொந்தபந்தம் யாரும் கிடையாது. பேரண்ட்ஸ் எப்பவோ இறந்து போயிட்டாங்க. இவ ஒரு வொர்க்கிங் விமன்ஸ் ஹாஸ்டல்ல தங்கியிருந்து வேலைக்கு வந்துட்டு இருந்தா... நல்ல பெண். தன்னால அந்த வலியை டாலரேட் பண்ணிக்க முடியலைன்னு தமயந்தியே என்கிட்டே சொல்லியிருக்கா...''

''அப்படி தற்கொலை பண்ணிக்கிறதாய் இருந்தா ஹாஸ்டலிலேயே அந்த முடிவை எடுத்திருக்கலாமே?''

''ஹாஸ்டலில் தமயந்திக்குத் தனியறை கிடையாது. அவ கூடவே ரெண்டு பேர் தங்கியிருக்கும்போது அவளாலே தன்னோட தற்கொலை எண்ணத்தைச் செயல்படுத்திக்க முடியாமல் போயிருக்கலாம்.''

''ஓ.கே. மேடம். உங்க கெஸ்வொர்க் சரியா தப்பான்னு நாளைக்கு டாக்டர்ஸ் தர்ற தமயந்தியோட போஸ்ட்மார்ட்டம் ரிப்போர்ட்டைப் பார்த்தா தெரியும்...'' சாதுர்யா எழுந்துகொண்டாள்.

மறுநாள் காலை பதினொரு மணி. தன் அலுவலக அறையில் உட்கார்ந்து பேப்பரைப் புரட்டிப்



**துப்பறியும் போட்டி – I**

வாசகர்களே! இப்போது உங்களுக்கான கேள்விகள். மனோகரிதான் கொலையாளியாக இருக்க முடியும் என்கிற முடிவுக்கு சாதுர்யா வால் எப்படி வர முடிந்தது? மனோகரியைக் காட்டிக் கொடுத்த அந்தத் தடயம் என்ன? எப்படி? கண்டுபிடிக்க வசதியாய் ஒரு

பார்த்துக்கொண் டிருந்தாள் பர்வதவர்த்தினி. இரண்டாவது பக்கம் தமயந்தியின் போட்டோவோடு அந்தச் செய்தி வெளியாகியிருந்தது.

**வயிற்றுவலி கொடுமையால்**
**பெண் ஊழியர் தற்கொலை**

தலைப்புச் செய்திக்குக் கீழே வரிவரியாய் ஓடியிருந்த செய்தியைப் படிக்க ஆரம்பித்த விநாடி, மேஜை மேல் இருந்த டெலிஃபோன் ரிங்டோனை வெளியிட்டது. ரிஸீவரை எடுத்தாள். சாதுர்யா பேசினாள்.

''என்ன மேடம்... பேப்பர் நியூஸ் பார்த்தீங்களா?''

''ம்... பார்த்தேன்...''

''அந்த நியூஸ் தப்பு. தமயந்தியை யாரோ கொலை செய்து அதுக்கப்புறம் தூக்குல தொங்கவிட்டிருக்காங்க...''

''யாரு...?''

''நேர்ல வந்து யார்ன்னு காட்டட்டுமா?''

''வாங்க...!'' சொல்லும்போது பர்வதவர்த்தினியின் குரலும் ரிஸீவரை வைக்கும்போது அவளுடைய கையும் நடுங்கின.

அடுத்த பதினைந்தாவது நிமிடம் பர்வதவர்த்தினிக்கு முன்பாய் உட்கார்ந்து இருந்தாள் சாதுர்யா.

படபடத்தாள் பர்வதவர்த்தினி.

''தமயந்தியை யார் கொலை பண்ணினாங்க..?''

''மனோகரி...''

''மனோகரியா?''

''ம்.. மனோகரிதான்! தமயந்தியோட மரணத்துக்கு அவதான் காரணம்.''

''எ...எ... எப்படி...?''

''இந்தத் தடயம் சொல்லுதே...?''

ஒரு புன்னகையோடு சொன்ன சாதுர்யா ஒரு சின்ன பாலிதீன் கவரில் பத்திரப்படுத்தி வைத்திருந்த அந்தத் தடயத்தை எடுத்து ஃபேன் காற்றில் பறந்துபோய் விடாமல் இருக்க மேஜையின் மேல் ஜாக்கிரதையாய் வைத்தாள். ●



**» தமயந்தியோட மரணத்துக்கு மனோகரிதான் காரணமாய் இருக்க முடியும்னு இந்தத் தடயம் சொல்லுதே...**

இந்தத் தொடரில் துப்பறியும் 'சாதுர்யா' கேரடக்டருக்காக நடிகை சினேகாவின் படம் பயன்படுத்தப்படுகிறது. வாசகர்கள் சினேகாவை சாதுர்யாவாக பாவிக்கவும்.

\- ஆர்.

**க்ளூ:**

அந்தத் தடயம் மிக மிகச் சிறியது. பெண்கள் அழகுபடுத்திக் கொள்ளும் உறுப்புகளில் ஒன்று. ஸ்யாமின் ஓவியத்தைப் பார்த்தும் கண்டுபிடிக்கலாம்!

ஒரு போஸ்ட் கார்டு எடுங்க. அந்தத் தடயத்தின் பெயரை எழுதுங்க. 'துப்பறிய வாங்க போட்டி-1' என்று குறிப்பிட்டு 'கல்கி' முகவரிக்கு அனுப்புங்க. அசத்தல் பரிசைப் பெறுங்க. ஆசிரியர் தீர்ப்பே இறுதி.

**முடிவு தேதி: 08.07.09**

பகல் நேரம். கொளுத்துகிற வெயில். ஊருக்கு வெளியே இருக்கும் சுடுகாட்டுக் கொட்டகையில் பிணம் ஒன்று எரிந்து கொண்டிருக்கிறது. வெளியே கட்டாந்தரையில் ஒருவன் உட்கார்ந்திருக்கிறான். கிழிந்த ஆடைகள். பார்த்தாலே மனநலம் பாதிக்கப்பட்டவன் என்பது தெரிகிறது.

அவன் அங்கிருந்து மெதுவாக எழுந்திருக்கிறான். ஊருக்குள் போகும் ஒற்றையடிப் பாதையில் தள்ளாடியபடி நடக்கிறான். ஊருக்குள் வருகிறான். ஒரு டீக்கடையில் நான்கு பேர் அமர்ந்திருக்கிறார்கள். பேப்பர் படித்தபடி டீக்கடைக்காரரிடம் பேச்சுக் கொடுக்கிறார்கள். உலகின் ஏதோ ஒரு மூலையில் வறுமையில் வாடுகிறவர்களைப் பற்றி இரக்கம் தொனிக்கப் பேசுகிறார்கள். இவன் கடை வாசலில் வந்து நிற்கிறான். பசி. கண்ணைக் கட்டும் மயக்கம். கடைக்காரரிடம் கை ஏந்துகிறான். அவர் எரிச்சலோடு 'போடா!' என்றபடி சுடு தண்ணீரை எடுத்து அவன் மீது ஊற்றுகிறார். அவன் பதறி, விலகி ஓடுகிறான்.

ஊர்க் குப்பை எல்லாம் குவிந்து கிடக்கும் மேட்டில், வெட்ட வெளியில் படுத்துக் கிடக்கிறான். பசி. எழுந்து நடக்கிறான். ஒரு வீட்டு வாசலில் நடுத்தர வயதுக்காரர் ஒருவர் அமர்ந்திருக்கிறார். அவர் முன்பாக ஒரு நாய். கையில் இருக்கும் பிஸ்கட்டுகளை ஒவ்வொன்றாக எடுத்துப் போட, நாய் பாய்ந்து, கவ்வி எடுத்துச் சாப்பிடுகிறது. இவன் அவர் முன் நிற்கிறான். கையை நீட்டுகிறான். அவர் அவனைத் திட்டி, விரட்டுகிறார்.

ஊர் பொது மைதானத்தில் சிறுவர்கள் சிலர் கும்பலாக விளையாடிக் கொண்டிருக்கிறார்கள். இவன் தடுமாறித் தடுமாறி அவர்கள் இருக்கும் இடத்துக்கு நடந்து போகிறான். கல்லால் அடித்து அவனைத் துரத்துகிறார்கள் அந்தச் சிறுவர்கள்.

சிறுவர்களிடம் இருந்து தப்பித்து எங்கு போவது என்று தெரியாமல் ரோட்டில் நடந்து வருகிறான் அவன். அது ஊரின் மற்றொரு பகுதி. அங்கே நான்கு பேர் ஒருவனை வெறித்தனமாகத் தாக்குவதைப் பார்க்கிறான்.



பாலுசத்யா

அதிர்ந்து போகிறான். பார்த்தாலே ஏதோ ஜாதிச் சண்டை என்று தெரிகிறது. வீதியில் எரிந்த டயர்களும், உடைந்த பாட்டில்களும்.

இதையெல்லாம் வெறித்துப் பார்க்கிறான். பிறகு, ஊரைவிட்டு விலகி, மெதுவாக பழைய ஒற்றையடிப் பாதையிலேயே ஓடி சுடுகாட்டுக்கு வந்து, பழைய இடத்தில் அமர்ந்துகொள்கிறான்.

'பயம்' படத்தின் இயக்குநர் மணிகண்டனுக்கு வேதாரண்யத்தை அடுத்துள்ள குமரன்காடுதான் சொந்த ஊர். தற்போது, சென்னை எம்.என்.சி. நிறுவனத்தில் கோ-ஆர்டினேட்டர். இயக்குநர் சசி கணே




# ஒற்றையடிப்பாதையில் ஓடும் பயம்

சனின் 'திருட்டுப் பயலே' படத்தில் சிறிது காலம் உதவி இயக்குநராகப் பணியாற்றியவர்.

நாகப்பட்டினத்தில் இருக்கும் ஒரு கிராமத்தின் அழகை அப்படியே அள்ளி, கண் முன் கொண்டு வந்து நிறுத்துகிறது செந்தில்நாத்தின் கேமரா. பொருத்தமான, உறுத்தாத திருமுருகனின் இசை, படத்தைச் சீராக நகர்த்திச் செல்கிறது.

''ஷார்ட் ஃபிலிம் மூலமா ஒரு நல்ல விஷயத்தைச் சொல்லணும்னு நினைச்சேன். அதுக்காகத்தான் இந்தப் படத்தை எடுத்தேன். பேப்பர் படிச்சிட்டு, டி.வி. பாத்துட்டு எது எதுக்கோ இரக்கப்படு வாங்க. ஆனா, யதார்த்தத்துல, கண்ணுக்கு நேரா கஷ்டப்படுற ஒருத்தனைப் பாக்குறப்போ உதவி செய்யுற மனப்பான்மை யாருக்குமே வர்றதில்ல'' என்று வருத்தம் தொனிக்கப் பேசுகிறார் மணிகண்டன்.

காலம் எவ்வளவோ மாறிவிட்டது. ஈ மெயிலில் செய்தி சொன்னால் போதும். உதவுவதற்கு உலகின் மூலை, முடுக்கில் இருந்தெல்லாம்கூட ஓடி வருகிறார்கள். விழிப்புணர்வும் உதவும் மனப்பான்மையும் உள்ள மனிதர்கள் எத்தனையோ பேர் இருக்கிறார்கள்.

இப்படியெல்லாம் சொல்கிறார்கள்.

ஆனால், மனநலம் குன்றியவர்கள் என்றால் எல்லோருமே ஓர் அடி தள்ளித்தான் நிற்கிறார்கள். தெருவோரமாக காலில் அடி பட்டுக் கிடக்கும் நாயை புளூகிராஸில் சேர்க்கிற இளகிய மனம் படைத்தவர்கள் கூட, 'பைத்தியக்காரன்' என்று இவர்களைப் புறம்தள்ளுவது நடக்கத்தான் செய்கிறது. மற்ற யாரையும்விட, இவர்கள் மேல் அதிகக் கவனம் செலுத்தவேண்டிய பொறுப்பு நம் ஒவ்வொருவருக்கும் இருக்கிறது. ஏனென்றால், இவர்கள் குழந்தைகள்.

தொடர்புக்கு: **மணிகண்டன்-99769 13155**

இனி கொச்சி நகரத்தில் தெருவில் குப்பை கொட்டினால் கொட்டியவருக்குப் பத்தாயிரம் ரூபாய் அபராதம். இதற்காக ஒரு சட்டம் கொண்டு வந்திருக்கிறார் கொச்சி நகர மேயர் மெர்சி வில்லியம்ஸ். நகரத்தில் ஆங்காங்கே வீடியோ கேமராக்களைப் பொருத்தி, குப்பை கொட்டுகிறவர்களை உடனடியாகக் கண்டுபிடிக்கவும் ஏற்பாடு. தெரு ஓரத்தில் நிறுத்தி குப்பைகளைக் கொட்டிக் கொண்டிருந்த இரண்டு தனியார் லாரிகளின் மீது, முதல் நாளே அபராதம் பாய்ந்திருக்கிறது!

*(மெர்சி அம்மா! குப்பை விஷயத்தில் கொஞ்சம் கூட மெர்சி காட்டாதீங்க!)*

கேரளாவில் பத்திரிகை உலகத்தினருக்கு இது போதாத நேரம். சமீபத்தில் மீடியா மீதான அட்டாக் ரொம்ப அதிகமாகி விட்டது. அண்மையில் மாத்ருபூமி பத்திரிகையின் சுமார் பத்தாயிரம் பிரதிகள் அதிகாலை வேளையில் தலைச்சேரியில் கொளுத்தப்பட்டன. அதற்கு முன்பு மலையாள மனோரமாவின் இருபதாயிரம் பிரதிகள் தீ வைக்கப்பட்டன. மேலும், மங்களம் பத்திரிகையின் அலுவலகம் தாக்கப்பட்டது. கேரள உழைக்கும் பத்திரிகையாளர்கள் யூனியன் இந்தத் தாக்குதல்களுக்குக் கடும் கண்டனம் தெரிவித்துள்ளது.

*(நெருப்பு வெச்சாலும், உயிர்ச் சேதமில்லாதவரைக்கும் சந்தோஷம் ஸாரே!)*

மலையாள மெகா ஸ்டாரான மம்முட்டி சினிமா உலகில் காலடி எடுத்து வைத்து கால் செஞ்சுரி ஆகிறது! அண்மையில் 'பிளே ஹவுஸ்' என்ற பெயரில் திரைப்படத் தயாரிப்பு, விநியோக கம்பெனி ஒன்றை ஆரம்பித்திருக்கிறார். சூட்டோடு சூடாக, தாமே நடிக்க ஒரு படம் தயாரிக்கிறார். மூன்று படங்களின் விநியோக உரிமையை வாங்கி இருக்கிறார்.

*(படம் ஊத்திக்கிட்டா, நஷ்டத்தையும் பங்கு போட்டுக்குவீங்களா?)*

மரியாதைக்குரிய கம்யூனிஸ்ட் தலைவர் ஈ.எம்.எஸ். நம்பூதிரிபாட். அவரது நூற்றாண்டு விழாவை பிரகாஷ் காரத் கலந்துகொள்ள கேரளாவின் மார்க்சிஸ்ட் கட்சி விமரிசையாகக் கொண்டாடியது. ஆனால் அதில் கலந்து கொள்ள முதலமைச்சர் அச்சுதானந்தனுக்கு அழைப்பு இல்லை.

*(கேரளாவில் கோஷ்டி சண்டையில் நெம்.1 காங்கிரஸா கம்யூனிஸ்டா?)*

குட்டநாடு கடல்நீர் சூழ்ந்த, சாலை வசதிகள் இல்லாத பகுதி. உப்பு, புளிக்குக் கூட அவர்கள் நெடுந்தூரம் போக வேண்டும். அப்பகுதி மக்களுக்காக 'திரிவேணி' என்ற மிதக்கும் கூட்டுறவு சில்லறை அங்காடி துவக்கப்பட்டுள்ளது. ஆயிரம் சதுர அடி பரப்பில் அமைந்துள்ள இந்த அங்காடி, காலை எட்டு மணி முதல் மாலை ஆறு மணி



அச்சுதானந்தன்



கருணாகரன்

# கேரளா பக்கம்

வரை மிதந்து சென்று விற்பனை செய்யும்.

*(கேரளாவுல கடையே மிதக்குது! நம்ம ஊர்ல கடைக்குப் போயிட்டு வந்து மிதக்கறாங்க!)*

(முன்னாள் முதல்வரும், காங்கிரஸ்காரருமான கருணாகரனுக்குப் பதவி யோகம் அடிக்கப் போவதாக டெல்லி பட்சி சொல்கிறது. அநேகமாக ஏதாவது ஒரு தென் மாநில கவர்னராக அவர் அனுப்பப்படுவார் என்கிறார்கள்.

*(அப்பாடா! கேரளா காங்கிரஸில் ஒரு கோஷ்டி குறையும்!)*

# மம்முட்டி 25





ஈ.எம்.எஸ்.

**மா**லப்புரம் மாவட்டம் நன்னாம்பரா பஞ்சாயத்தில் ஓர் அதிசயம். அங்கே மட்டும் சுமார் 230 இரட்டையர்கள் வசிக்கிறார்கள். இந்த இரட்டையர்களில் ரொம்ப சீனியர் 85 வயது முகமது காஜி. ஜூனியர் மோஸ்ட் கடந்த மே மாதம் ராம்லா என்ற பெண்ணுக்குப் பிறந்த இரட்டைப் பையன்கள். இங்கே மட்டும் ஏன் இப்படி நடக்கிறது என்ற ஆராய்ச்சி தொடங்கப்பட்டுள்ளது.

*(ஆராய்ச்சியின் முடிவில் ஒரு ரிப்போர்ட் வருமா? இல்லை இரண்டாக வருமா?)*

**- பரத் ராம்**



# ஏகாந்தம் இனிது

குற்றாலத்தில் குளிர்ந்த காலை நேரத்தில் மலை மேல் ஏறிப் போவதில் தனித்ததோர் மகிழ்ச்சி உண்டு. கிழக்கே உதிக்கும் சூரியன் மலையில் அங்கங்கே இடம் கொடுக்கும் சந்துகளின் வழியாகத் தன் பொற்கிரணங்களை அனுப்பி உபசரணை செய்யும். ஒரு மலையிலிருந்து இன்னொரு மலை மீது ஏறும்போது பதினாயிரம் வித விதமான பச்சை நிறப் போர்வையுடன் மரங்கள் வரிசை வரிசையாகக் காட்சி அளிக்கும். அருவி விழும் சலசலத்த ஓசையும் பறவைகளின் கலகலவென்னும் கீதங்களும் சேர்ந்து நம்மைப் புதியதொரு நாதப் பிரபஞ்சத்துக்குக் கொண்டு போய்விடும்.

ஒருநாள் காலையில் மேலே கூறிய ஆனந்தங்களையெல்லாம் அனுபவித்துக் கொண்டு மலை மேலே ஏறிக் கொண்டிருந்தேன். சிற்றருவிக்குப் போகலாமென்று புறப்பட்டவனை, குற்றாலக் குன்றின் இயற்கை இன்பம் மேலே மேலே கவர்ந்து இழுத்துச் சென்றது. கடைசியாக, செண்பகாதேவிக்கே போய்ச் சேர்ந்து விட்டேன். செண்பகாதேவி அருவி விழும் இடத்தில் கிழக்கே செங்குத்தான பாறையும், அதன் மேலே உயரமான விருட்சங்களும் ஆகாசத்தைத் தொடுவனபோல் ஓங்கி நிற்கின்றன.

'இனிது இனிது ஏகாந்தம் இனிது' என்று தமிழ் மூதாட்டி பாடியதாகக் கூறுவார்களே, அது அந்த இடத்தின் ஏகாந்தத்துக்கே பொருந்தும்.

செண்பகாதேவி ஆலயத்தைத் தாண்டி அப்பால் சென்றதும், எதிரே வெள்ளை வெளேரென்று பாலருவி விழும் அற்புதத் தோற்றம் காணப்பட்டது. இருபக்கமும் உயர்ந்து நின்ற பாறைகளும், மரங்களும் இயற்கை தேவிக்கு இறைவன் கட்டிய கோயில் எனத் தோன்றியது.

இப்படி நான் எண்ணிய ஒரு கணத்துக்குள்ளே என் எண்ணம் தவறு என்று தெரிய வந்தது. ''ஸுஜலாம் ஸுபலாம் மலயஜ சீதலாம்'' என்னும் வந்தேமாதர கீதத்தின் முதல் அடி, புருஷக் குரலிலே கேட்டது. புருஷக் குரலிலும், கிழக்குரலாய்த் தொனித்தது. குரல் வந்த இடத்தைப் பார்த்தேன். அருவி விழும் இடத்துக்குச் சற்று தூரத்தில் கீழேயிருந்த பள்ளத்தாக்கில் மொட்டைப் பாறை ஒன்றில் ஒரு சாது உட்கார்ந்திருந்தார்.

பெரிய தாடியோடும், சடா மகுடத்தோடும் விளங்கியபோதிலும், உடுத்தியிருந்த துணி மட்டும் வெளுப்பாயிருந்தது. ஆம்; துணி மட்டுந்தான் வெளுப்பாயிருந்தது. தாடியும் சடாமகுடமும் நல்ல கருநிறமாயிருந்தன! குரல் கிழக்குரல்; தாடியும் சடையும் யௌவனப் பருவத்துக்குரியவை. இது என்ன விந்தை?

**('பொங்குமாங்கடல்' கதையிலிருந்து...)**



# இந்தோனேஷியன் சீரிஸ் வென்ற முதல் இந்தியர் என்ற பெருமையோடு சாய்னா நாடு திரும்பியிருக்கிறார்!

ச.ந.கண்ணன்



**த**மிழக கிரிக்கெட் வீரர்களுக்கு யோகம் அடித்திருக்கிறது. பத்ரிநாத், விஜய், தினேஷ் கார்த்திக் என்று மூன்று தமிழக வீரர்கள் இந்திய அணியில். ஸ்ரீகாந்த் தேர்வுக் குழுவில் ஒருவராக இல்லாமல் போயிருந்தால் பத்ரிநாத்துக்கும் விஜய்க்கும் இந்திய அணியின் கதவு திறக்க வாய்ப்பே இல்லை. மனோஜ் திவாரியும் புஜாராவும் மே.இ தீவுக்குப் பறந்திருப்பார்கள். ஆனால், கிடைக்கும் வாய்ப்புகளை, தமிழக வீரர்கள் தொடர்ந்து கோட்டை விடுவது வாடிக்கையாக இருக்கிறது.

**த**மிழக கிரிக்கெட் வாரியத்திலிருந்து புது அறிவிப்பு வந்துள்ளது. சேப்பாக்கம் ஸ்டேடியத்தை இடித்துவிட்டு 175 கோடி செலவில் புது ஸ்டேடியம் கட்டப்போகிறார்களாம். 2011 உலகக்கோப்பைக்குச் செய்கிற புது ஏற்பாடு. எனில், பழைய மகாபலிபுரம் சாலையில் 100 கோடி செலவில் மேற்கூரை வசதியுள்ள ஒரு கிரிக்கெட் ஸ்டேடியம் கட்ட ஆயத்தமானார்களே.

அது என்ன ஆயிற்று?

**மே**ற்கு இந்தியத் தீவில் நடைபெற்ற நான்கு ஒருநாள் போட்டிகளையும் நள்ளிர வில் கொட்டக் கொட்ட விழித்துக் கொண்டு யார் பார்த்தார்கள் என்று நினைக் கிறீர்கள்? அதுவும் கடந்த சில மாதங்களாக 20-20 ஆட்டங்களையே பார்த்துவிட்டு 50 ஓவருக்குத் தாவினால் கொட்டாவி வரு கிறது. ஐந்து ஓவருக்கு ஒருமுறை ஃபோர் அடிக்கும்போது ரிமோட்டை கை தேடு கிறது. பார்வையாளர்களுக்கு மட்டுமல்ல, கிரிக்கெட் வீரர்களுக்கும் இதே மனக் குழப்பம்தான் என்பது அவர்களுடைய ஆட்டத்தில் தெளிவாகத் தெரிகிறது. பரபர வென ஆடுவதா, டொக்கு வைப்பதா என்கிற குழப்பதிலேயே இருந்து பிறகு கேட்ச் கொடுத்துவிட்டுக் கிளம்பிவிடு கிறார்கள். இந்த நிலையில் அடுத்த ஒன்பதாவது மாதத்தில் இன்னொரு 20-20 உலகக்கோப்பை.

# சாய்னா புயல்

**சா**னியா மிர்சா, விளையாட்டுச் செய்தி களுக்குப் பதிலாக பரபரப்புச் செய்திகளில் தான் அதிகம் பேசப்பட்டார். ஆனால் அதே ஹைதராபாத்காரரான சாய்னா நெஹ்வால் சத்தமில்லாமல் இரண்டு மாதங்களுக்கு ஒரு சாதனை செய்துவருகிறார். இந்தோனே ஷியன் சூப்பர் சீரிஸ் வென்ற முதல் இந்தியர் என்கிற சாதனையோடு இப்போது ஊர் திரும்பியிருக்கிறது அந்தப் புயல். சென்ற ஒலிம்பிக்கில் கால் இறுதிவரை சென்ற சாய்னா அடுத்த ஒலிம்பிக்கில் நிச்சயம் பதக்கம் வெல்வார் என்ற நம்பிக் கையைத் தருகிறார்.

**க**டந்த இருபது வருடங்களாக இந்திய டென்னிஸுக்குப் பெருமை சேர்த்து வரும் லியாண்டர் பெயஸின் சமீபத்திய சாதனை ப்ரெஞ்ச் ஓப்பன் போட்டியில் டபுள்ஸ் பட்டம். அட்லாண்டா ஒலிம்பிக் ஸில் வெண்கலம் மற்றும் டபுள்ஸ் கிராண்ட்ஸ்லாம்கள் வென்ற பெயஸ், ஒலிம்பிக்ஸில் பெரிதாக எதுவும் சாதிக்க வில்லை. 35 வயதாகிவிட்டது. அவ்வளவு தானே என்றால் இந்தக் கேள்வியை அடியோடு மறுக்கிறார் பெயஸ். 'நான் சாதிக்கவேண்டியது இன்னும் நிறைய இருக்கிறது. அடுத்த வருடம் டெல்லியில் நடக்கும் காமன்வெல்த் கேம்ஸ், பிறகு ஏசியன் கேம்ஸ், எல்லாவற்றையும்விட முக்கியமாக 2012ல் நடக்கவுள்ள ஒலிம் பிக்ஸ்'.

**டெ**ன்னிஸ் ஆட்டங்கள் கிரிக்கெட் போல அடிக்கடி மழையால் பாதிக்கப்படு வது உண்டு. இதற்கு ஒரு மாற்று ஏற் பாட்டைச் செய்திருக்கிறது விம்பிள்டன் நிர்வாகம். 87 வயதான விம்பிள்டன் சென்டர் கோர்ட் அரங்கத்துக்கு இப்போது புதிதாக மேற்கூரை அமைத்திருக்கிறார்கள். ஆனால் மழை அல்லது இருள் வேளை களில் மட்டும்தான் மேற்கூரை செயல் படும். ●

# நீங்க ச்சும்மா கோடு போடுங்க... நாங்க உடனே ரோடு போடறோம்!

ஆமாம்! உங்கள் பாண்டிக்கு 'கல்கி' குழு, நேரில் வந்து உங்கள் பிரச்னை / யோசனையை ஆராய்ந்து, உங்கள் வாய்ஸுக்கு 'கல்கி' இதழ் மூலம் மைக் கொடுக்கும்?

**ஆனா சில கண்டிஷன்ஸ்...**

- கீழே உள்ள கூப்பனைக் கத்தரித்து ஒட்டி அனுப்பப்படும் கடிதம், படைப்பு மட்டுமே, பரிசீலனைக்கு எடுத்துக்கொள்ளப்படும்...
- ஒரு கடிதத்தில் 5 செய்திகள் / படைப்புகள் மட்டுமே இருக்கலாம்.
- ஒருவரே எத்தனை கடிதம், படைப்புகள் வேண்டுமானாலும் அனுப்பலாம் (தனித்தனி கூப்பனுடன்).
- பிரசுரமாகும் கடிதங்கள், யோசனைகள், படைப்புகளுக்குச் சன்மானங்கள் உண்டு.
- வாசகர்கள் தேர்வு செய்யும் மிகச் சிறந்த கடிதம் அல்லது யோசனை அல்லது படைப்பு களுக்குச் சிறப்புப் பரிசும் உண்டு...
- பாண்டிச்சேரி வட்டாரத்தின்...

பிரச்னைகளுக்கு - ☑ பெட்டிஷன் பாக்ஸ்

ஆன்மிக, வியாபார, சுற்றுலா தலங்களின் சிறப்புக்கு - ☑ நியூஸ் ஏந்தி பவன்

சிறுகதைகள், கவிதைகளுக்கு - ☑ வேடந்தாங்கல்

நகைச்சுவைக்கு - ☑ ஜோக் ஃபால்ஸ்

என்றவாறு கூப்பனில் ☑ செய்து கவரின் மேல் ஒட்டி, உங்களின் முழு முகவரி, தொலைபேசி தொடர்பு எண் ஆகியவற்றைக் கட்டாயம் எழுதி அனுப்பவும்.

**கடிதங்கள் வந்து சேரவேண்டிய கடைசி தேதி : 25.7.09**

**கலக்க வருதுப்பா கல்கி**
**பாண்டிச்சேரி**

☐ நியூஸ் ஏந்தி பவன் ☐ பெட்டிஷன் பாக்ஸ்
☐ வேடந்தாங்கல் ☐ ஜோக் ஃபால்ஸ்

47, ஜவாஹர்லால் நேரு சாலை,
ஈக்காடுதாங்கல், சென்னை - 32

"ஸார், உங்கள் வீட்டில் குண்டு வெடித்துவிட்டதாமே?" "உங்களை அடித்துப் போட்டு விட்டார்களாமே?" "நீங்கள் எந்த மருத்துவமனையில் சிகிச்சை எடுத்துக் கொண்டிருக்கிறீர்கள்?" - என்னைப் பற்றி இப்படி எல்லாம் வதந்திகளைக் கிளப்பி விடுவது யார் என்று கேட்கிறார் இந்திய கம்யூனிஸ்ட் மாநிலச் செயலாளர் தா.பாண்டியன்



# தா.பா. Vs மு.க.?

சமீபத்தில் சென்னையில் நடந்த இந்திய கம்யூனிஸ்ட் கட்சியின் மாநில செயற்குழுக் கூட்டத்தில் ''தா.பாண்டியன் குறித்த வதந்திகளை கருணாநிதி தடுக்க வேண்டும்'' என்று அதிரடியாக ஒரு தீர்மானம் போடப்பட்டிருக்கிறது. தமிழக அரசியலில் ஒரு பரபரப்பை ஏற்படுத்தியிருக்கிறது இந்தத் தீர்மானம். நேரடியாக முதல்வரை நோக்கி, இவ்விவகாரத்தில் வேண்டுகோள் வைக்க வேண்டிய அவசியமென்ன? தா.பாண்டியனைக் குறித்த வதந்திகள் வருவதற்கு என்ன காரணம்? இந்திய கம்யூனிஸ்ட் கட்சி வட்டாரத்தில் பேசினோம்.

''அ-இ-அ-தி-மு.க.வுடன் இடதுசாரிகள் கூட்டணி அமைக்க முக்கியக் காரணமாக இருந்தவர் தா.பா.தான் என்று ஆளும் கட்சி நினைக்கிறது. இதனால் ஆளும்கட்சியினருக்கு அவர் மீது கடும் எரிச்சல். இந்தக் கூட்டணி நெருக்கம் ஏற்பட்டவுடனேயே தா.பா.வைச் சங்கடப்படுத்தும் பல வேலைகள் தொடங்கப்பட்டன'' என்று சொல்லும் தோழர்கள், ஒவ்வொன்றாகப் பட்டியலிடுகிறார்கள்:

· அவரது வீட்டில் நின்றிருந்த கார் எரிக்கப்பட்டது. இந்த கார் எரிப்பு வழக்

கில் இதுவரை குற்றவாளிகள் கண்டுபிடிக் கப்படவில்லை.

- வடசென்னை வேட்பாளராக நின்ற போது சொத்துக் கணக்கை முழுமையாகக் காட்டவில்லை என்று தி.மு.க. வேட்பாளர் ஆட்சேபணை தெரிவித்தார். ஆனால் தேர்தல் அதிகாரி தா.பா. மனுவை ஏற்றுக் கொண்டார். உடனே தி.மு.க. வேட்பாளர்

முன்ஜாமீன் வாங்க வேண்டிய அவசியம் ஏற்பட்டது. நிலம் தா.பா.வுக்குச் சொந்தம் என்று அடித்துச் சொல்லும் ஆவணங்கள் அவரிடம் இருக்கின்றன. ஆனால் அவரது சகோதரர் சட்டவிரோதமாக நிலத்தில் புகுந்து அனுபவிப்பதைத் தடுக்க, உசிலம் பட்டி ஏரியா காவல் நிலையத்தில் புகார் செய்தால் நடவடிக்கை எதுவும் இல்லை




நீதிமன்றத்தில் வழக்கு தொடர்ந்தார். அவர் தேர்தலில் நிற்பதைத் தடைசெய்ய வேண் டும் என்று முயற்சி மேற்கொள்ளப் பட்டது.

- தேர்தலுக்குப் பிறகு தா.பா.வுக்கும் அவரது சகோதரருக்கும் இடையே உசிலம் பட்டி பூர்விக நிலப் பிரச்னையை ஆளும் கட்சி பயன்படுத்திக் கொண்டது. இது தொடர்பாக தா.பா. சகோதரர் கிரிமினல் வழக்கு தாக்கல் செய்ததால், தா.பா.

யாம்.

இப்படி தொடர் சம்பவங்கள் இருக்க, தீர்மானம் நிறைவேற்றப்பட வேண்டிய அவசியத்தை ஏற்படுத்திய வதந்தியைப் பற்றி தா.பா. சொல்கிறார். "சென்ற வாரம் அலுவலகத்தில் இருந்தேன். அப்போது அரசியல் பத்திரிகையின் நிருபர் ஒருவர் ஃபோன் செய்து, 'ஸார். உங்க வீட்டில் குண்டுவெடித்து விட்டதாமே?' என்று கேட்டார். சில நிமிடங்களுக்குப் பிறகு

மன்னார்குடியிலிருந்து போன் செய்து, 'உங்களை அடித்துப் போட்டு விட்டார் களாமே' என்று தோழர்கள் பதறுகிறார் கள். ஒரு தினசரி பத்திரிகையிலிருந்து ஃபோன் செய்து, 'எந்த மருத்துவமனையில் இருக்கிறீர்கள்?' என்று விசாரிக்கிறார்கள்.



● மகேந்திரன்

இந்த வதந்தி களைக் கிளப்பு வது யார்? நிலப் பிரச்னையில், மதுரையிலுள்ள காவல் நண்பர் கள், 'எங்கள் கைகள் கட்டப் பட்டுள்ளன' என்று சொல் கிறார்கள். நடந்த சம்பவங்களைப் பார்த் தால் என்னைச் சுற்றி சதிவலை பின்னப்படு கிறதோ என்று சந்தேகம் எழுகிறது.

தமிழக முதல்வர் காவல் துறையைக் கைவசம் வைத்திருக்கிறார். உளவுத்துறை தான் இதுபோன்ற வதந்திகளுக்கு உந்து சக்தி என்று நாங்கள் கருதுகிறோம். பின்னர் எனக்கு 'ஏதேனும்' நடந்தால் விஷயத்தைத் திசைதிருப்ப வசதியாக இருக்கும். எனவே தான் தீர்மானம் நிறைவேற்றி முதல்வரை வதந்திகளைத் தடுக்குமாறு வலியுறுத்தி னோம்.''

''வேறு ஏதேனும் காரணங்கள் உண்டா?'' - துணைச் செயலாளர் மகேந் திரனைக் கேட்டோம். ''எங்கள் வாழ்க்கை திறந்த புத்தகம். காங்கிரஸ், பா.ஜ.க. ஆகிய கட்சிகள் மற்றும் அதனுடன் கூட்டு சேர்ந் துள்ள கட்சிகளுடன் கூட்டணி வைக்கக் கூடாது என்பது எங்கள் தேசியக் குழுவின் வழிகாட்டுதல். அதனால்தான் அ.இ. அ.தி.மு.க.வோடு கூட்டு வைத்தோம். இது தா.பா.வின் தனிப்பட்ட முடிவு அல்ல. எனவேதான் தமிழக முதல்வரை நோக்கித் தீர்மானம் நிறைவேற்றினோம்'' என்றார்.

**- கௌசி**

## உறங்கா நகரத்தில் உயிர்த் தோழன்

திரைக்கு வந்து வெற்றிகரமாக ஓடிக்கொண்டிருக்கும் 'மாயாண்டி குடும்பத்தார்' படம், தமிழ்நாட்டில் நூற்றைம்பது தியேட்டர்களில் ரிலீஸ் செய்யப்பட்டிருக்கிறது. படத்தை மாற்றிய தியேட்டர்கள் மீண்டும் மாயாண்டி குடும்பத்தாரையே திரையிட்டிருப்பதில் யூனிட்டே சந்தோஷத்தில் திளைத்திருக்கிறது. அந்த மகிழ்ச்சியை இரட்டிப்பாக்கும் வகையில், யுனைடெட் ஆர்ட்ஸ் நிறுவனத்தின் தயாரிப்பாளர் சா.மு.சிவராஜ், மேலும் மூன்று படங்களைத் தயாரிக்கப் போவதாக அறிவித்துள்ளார். அதில் ஒன்று 'கோரிப்பாளையம்'. ராசுமதுரவன் இயக்குகிறார்.

மதுரைக்கு உறங்கா நகரம் என்கிற பெயரும் உண்டு. அப்படியான நகரத்தில் தூக்கத்தைத் தொலைத்த இளைஞனின் கதைதான் 'கோரிப்பாளையம்'. தன் வெற்றிப்பட டீமோடு கைகோர்க்கிறார் இயக்குநர். 'என் உயிர்த்தோழன் பாபு' மாதிரியான நடிகரைத் தேடிக் கொண்டிருக்கிறாராம். ஜூலை இறுதியில் படப்பிடிப்பு துவங்குகிறது.





# ஸ்ரீ சாரதா சக்தி பீடம்



72, காமராஜ் சாலை. பழைய பெருங்களத்தூர்.
(வழி) தாம்பரம். சென்னை - 63. போன் : 22760612, 22762299
City Office No.7, முதல் மாடி. வேலு தெரு. மேற்கு மாம்பலம்.
(அயோத்யா மண்டபம் அருகில்) சென்னை - 600 033. போன் : 23714942

## ஏழை மாணவர்களுக்கு உதவுங்கள்

பேரன்புடையீர், வணக்கம்!

நம் சக்தி பீடத்தின் சார்பில் கடந்த 20 ஆண்டுகளாக நடைபெற்று வரும் "ஸ்ரீ ராமகிருஷ்ண சேவா குருகுலத்தில்" தாய் தந்தையற்ற திக்கற்ற, மற்றும் வறுமை கோட்டின் கீழ் வாழும் 200 மாணவ மாணவிகளும் தங்கி படித்து வருகின்றனர்.

நாள்தோறும் இறைவழிபாடு, கூட்டு பிரார்த்தனை, பகவத்கீதை பாராயணம் ஆகியவைகளுடன் நல்ல கல்வி, காலை மாலை உடற்பயிற்சி ஆகியவைகள் அளிப்பதுடன், உணவு, உடை, தங்குமிடம் ஆகியவைகளும் இலவசமாக வழங்கப்பட்டு, நல்ல முறையில் வளர்ந்து வருகிறார்கள்.

மேலும் பகவான் ஸ்ரீ ராமகிருஷ்ணர், சுவாமி விவேகானந்தர், ஆகியோர்களின் உயர்ந்த லட்சியங்கள் போதிக்கப்படுவதுடன், சமுதாய சேவை பயிற்சியும் அளிக்கப்படுகிறது.

இக்குருகுலத்தின் பராமரிப்பு செலவு முழுவதும் நன்கொடையாளர்கள் அளிக்கும் உதவிகள் மூலம் மட்டுமே நடைபெற்று வருகிறது. ஆகவே தாங்கள் இப்புனிதப் பணிக்கு தங்களால் இயன்ற உதவியைச் செய்யும்படி பணிவன்புடன் கேட்டுக் கொள்கிறோம்.

| | |
|---|---|
| • காலை சிற்றுண்டி (200 பேருக்கு) | ரூ. 1,000/- |
| • மதிய உணவு | ரூ. 2,000/- |
| • இரவு சிற்றுண்டி | ரூ. 1,000/- |
| • இனிப்பு மற்றும் பால் வழங்குதல் | ரூ. 1,000/- |
| • ஒரு மாணவனுக்கு ஓராண்டிற்கு கல்வி உதவித்தொகை | ரூ. 1,000/- |
| • ஒரு மாணவனுக்கு பராமரிப்பு செலவு ஓராண்டிற்கு (உணவு, உடை, கல்வி) | ரூ. 12,000/- |
| • குருகுலத்தின் ஒரு மாதத்திற்கான பராமரிப்பு செலவு | ரூ. 2,00,000/- |

**நன்கொடைகளுக்கு 80G பிரிவின்படி வருமானவரி விலக்கு உண்டு**

மேலும் தங்களின் பிறந்த நாள், திருமண நாள், குழந்தைகளின் பிறந்த நாள், தொழில் /வியாபாரம் தொடங்கிய நாள், மற்றும் இதர பண்டிகை நாட்களான தீபாவளி, பொங்கல், கிறிஸ்துமஸ், ரம்ஜான் போன்றவைகளில் மாணவர்களுக்கு சிறப்பு விருந்து ஒன்றை அளித்து அவர்களுடன் மகிழ்ச்சியைப் பகிர்ந்து கொள்ளலாம்.

தாங்கள் அளிக்கும் தொகை எவ்வளவு சிறியதாக இருந்தாலும் அன்புடன் ஏற்றுக்கொள்கிறோம். தங்கள் நன்கொடைகளை ஸ்ரீ சாரதா சக்தி பீடம் என்ற பெயருக்கு Cheque / DD / MO மூலம் அனுப்பி வைக்கும்படி பணிவன்புடன் கேட்டுக் கொள்கிறோம். மேலும் எங்களிடமிருந்து ரசீதைப் பெற்றுக் கொள்வது அவசியம்.

இறைவன் தொண்டில்
சுவாமி ஸ்ரீ ஸர்வாத்மானந்தர் நல்லாசியுடன்
நிர்வாகம்.

அருணா சரண்யா



**வி**ட்டல ஆலயத்தைக் கண்டு மெய்மறந்தாள் கானோபாத்ரா. விட்டலனை எண்ணி மனமுருகப் பல அபங்கங்களை இயற்றினாள்.

'நான் இழிகுலத்தில் பிறந்தவள். ஆனால் நீ யாரையுமே உன்னதமாக்குபவன் என்று பெயர் எடுத்திருக்கிறாய். அதைத் தக்க வைத்துக்கொள். உன் திருவடிகளில் சரணமடைந்தேன். என்னை ஏற்றுக்கொள்' என்கிறது கானோபாத்ராவின் ஓர் அபங்கம்.

அந்தக் காலத்தில் நிலவிய ஓர் கண்டனத்துக்குரிய செயலை இங்கு குறிப்பிட்டே ஆக வேண்டும். கானோபாத்ரா விட்டலனின் ஆலயத்தைத் தரிசித்தாள். திருவிழாவின் போது விட்டலனின் விக்கிரகம் வீதிகளில் வலம் வரும்போது கண்ணாரக் கண்டாள். ஆனால் கருவறையைத் தரிசிக்கும் பாக்கியம் அவளுக்கு இல்லை.

**கானோபாத்ராவின் உடலிலிருந்து ஓர் ஒளி தோன்றி பாண்டுரங்கனின் திருமேனியில் ஐக்கியமானது!**

ஆலயத்தின் அருகிலுள்ள ஓர் இடத்தில் தங்கி எப்போதும் விட்டல பஜனையும் செய்து வந்தாள். கானோபாத்ராவின் அளவற்ற அழகும் அற்புதக் குரலும் அத்தனை பேரையும் கவர்ந்திழுக்க, அரசனுக்கு மட்டும் செய்தி எட்டாமல் இருக்குமா?

'அழகி. மதுரமான குரல் உடையவள். கணிகைக் குலத்தைச் சேர்ந்தவள்.' இவ்வளவு இலக்கணத்துக்கும் பொருந்திய ஒருத்தி தன் அணைப்பிலும் ஆதரவிலும் தான் இருக்கவேண்டும் என்று கணக்குப் போட்டான் அவன். சில சேவகர்களைப் பண்டரிபுரத்துக்கு அனுப்பினான், 'உடனே கானோபாத்ராவை என்னிடம் அழைத்து வாருங்கள்' என்ற கட்டளையுடன்.

கானோபாத்ரா துடித்தாள். தான் அரண்

# கானோபாத்ரா என்றொரு கானம்!

மனையைத் தவிர்த்து ஒதுங்கினாலும், அது தன்னை நாடி வந்து தொலைத்து விட்டதே! 'ஐயா, என்னை விட்டு விடுங்கள். பண்டரிபுரத்திலேயே என் வாழ்நாளைக் கழிக்கத்தான் ஆசை' என்றாள். மன்னனின் விருப்பம் வேறாக இருக்க, வீரர்கள் விடுவார்களா என்ன? அரண்மனைக்கு வந்துதான் ஆகவேண்டும் என வற்புறுத்தினார்கள்.

சற்று யோசித்த கானோபாத்ரா ஒரு முடிவுக்கு வந்தாள். 'நான் பாண்டுரங்கனிடம் விடைபெற்றுக் கொண்டு வந்துவிடுகிறேன்' என்றாள். வீரர்கள் சம்மதிக்க, அவர்களைக் காத்திருக்க வைத்துவிட்டு வேகமாக ஆலயத்துக்குள் நுழைந்தாள்.

விட்டலனின் கருவறைக்கு எதிரே நின்று புலம்பினாள். 'பாண்டுரங்கா, பக்தர்களைக் காப்பவனே, உன்னையே சரணடைந்து விட்டேன். காப்பாற்று' என்று கதறினாள்.

அப்போது அந்த அற்புதம் நடந்தது. கதறியபடி கீழே விழுந்த கானோபாத்ராவின் உடலிலிருந்து ஓர் ஒளி தோன்றி பாண்டுரங்கனின் திருமேனியில் ஐக்கியமானது. பார்த்துக்கொண்டிருந்த அத்தனை பேரும் கானோபாத்ராவின் பக்தியின் உன்னதத்தை உணர்ந்து கொண்டனர். அதே சமயம் ஆலய அர்ச்சகர்களுக்கு ஒரு கவலை உண்டானது. வெளியே காத்திருக்கும் வீரர்கள் நடந்ததைச் சொன்னால் நம்புவார்களா? தவிர இப்படிப்பட்ட பக்தையின் உடல்கூட அரசனை அடையாமல் இருப்பதுதானே நியாயம்? இப்படி எண்ணிய அவர்கள் ஆலயத்தின் தெற்குப் பிராகாரத்தில் ஒரு குழியை வெட்டி கானோபாத்ராவின் உடலை அங்கு புதைத்துவிட்டனர். அடுத்த கணம் மற்றோர் அற்புதம் அவர்களுக்குக் காத்திருந்தது.

புதைத்த இடத்தில் ஓர் அழகிய மரம் வேகமாக வளர்ந்து பசுமையான இலைகளும் பூக்களுமாகப் புன்னகைத்தது.

நெடுநேரமாகியும் கானோபாத்ரா வெளியே வராததால் வீரர்கள் ஆலயத்துக்குள் நுழைந்தனர். அங்கு கானோபாத்ரா காணப்படாததால் அர்ச்சகர்களை மிரட்டினர். அவர்கள் நடந்ததைக் கூற, தெற்குப் பிராகாரத்தில் புதிய மரம் பூத்துக் குலுங்குவதைக் கண்டார்கள். அரசனிடம் விவரம் கூறப்பட்டது. அவன் முதலில் நம்பவில்லை. எனினும் கானோபாத்ராவின் வாழ்க்கையைப் பலரும் கூறக் கேட்டதும் உண்மையை உணர்ந்து கொண்டான். விட்டலனின் ஆலயத்துக்கு வந்து அந்த மரத்தின் எதிரே நின்று கண்ணீர் மல்கக் கைகூப்பினான்.

'**அ**த்தனை சுகங்களுக்கும் சொந்தமானவன். அத்தனை உலகங்களுக்கும் சொந்தமானவன். அத்தனை ஜீவன்களுக்கும் சொந்தமானவன். ஆனாலும்

12

## அபங்க அமுதம் - 12

டாளீ வாஜவாவீ குட உபாராவீ
வாட ஹே சாலவீ பண்டரீசீ
பண்டரீசா ஹாட கவ்லாசீ பேட
மிளாலே சதுஷ்ட வாரகரீ
பதாகாசே பார மிளாலே அபார
ஹோதோ ஜயஜயஹார பீமாதிரீ
ஹரிநாம கர்ஜதா பய நாஹீ சித்தா
ஐஸே போலே கீதா பாகவத
கட நட யாவே சுத்த ஹோவுனீ ஜாவே
தவண்டீ பிடீபாவே சோகாமேளா

- பக்த சோகாமேளர்

'தாளம் போடுங்கள். கொடியை உயர்த்திப் பிடியுங்கள். பண்டரிபுரம் செல்லும் சாலையில் நடக்கத் தொடங்குங்கள். அங்குள்ள சந்தையில் இறைவனுக்குச் சாற்றக்கூடிய எல்லாப் பொருட்களும் கிடைக்கும். அங்கு பலவகையான பக்தர்களைக் காணலாம். பீமா நதிக்கரையில் ஜெயஜெய என்ற கோஷமும், ஹரியின் திருநாமமும் உரத்துக் கேட்பதால் மனத்தில் எந்த வித பயமும் இருக்காது. இங்கு வரும் பாவிகளும் பரிசுத்தம் ஆகின்றனர்.'

இந்தப் பண்டரிநாதன் செங்கல்லின் மீது நிற்கிறானே' என்று வியந்து பாடியவர் கானோபாத்ரா.

'கானோபாத்ரா அம்மையாரை' வலம் வந்து, அதிலிருந்து உதிர்ந்த இலைகளை பிரசாதமாகப் பெற்ற நம் கவனத்தை, வேறொரு காட்சி கவர்ந்தது.

விட்டல ஆலயத்தின் வெளிப் பிராகாரத்தில் இருவர் இருவராக, ஒருவர் விரல்களை மற்றவர் பற்றியபடி வட்ட மாகச் சுற்றிவந்து ஆடினர். அதாவது ராசலீலை ஓவியத்தில் ஒவ்வொரு கண் ணனுடன் ஒவ்வொரு கோபிகை (ஒருவரது வலக்கையால் மற்றவரது இடக்கை என்பதுபோல்) கைமாற்றிப் பிடித்துக் கொண்டு வட்டமாகச் சுற்றிவந்து நடன மாடுவார்களே அதுபோலத்தான். இப்படி ஆடுவதும் இங்கு ஒரு மரபாக இருக்கிறது. தோழியர், கணவன், மனைவி என்று இருவர் இருவராக உற்சாகத்தோடு ஆடிக் கொண்டிருந்தனர்

கானோபாத்ரா சன்னிதிக்கருகே உள்ள வாயில், கானோபாத்ராவின் பெயரிலேயே அழைக்கப்படுகிறது. இதன் வழியாக வெளியேறினோம். மீண்டும் ஆலயத்தை வெளிப் புறம் வலம் வந்து கிழக்கு வாயிலை அடைந்தபோது நாம தேவர் சமாதியடைந்த படிக்கட்டு களுக்கு எதிரே தென்பட்டது மற்றொரு சமாதி. அது சோக் காமேளருடையது.

சித்திரம்: **வேதா**



# கானோபாத்ராவைப் புதைத்த இடத்தில் ஒரு மரம் வேகமாக வளர்ந்து தளிர்த்தது!



எஸ்.செந்தில்குமார்

# பறவையின் கண்கள்





தெற்கு கோபுர வாசலில்
நுழைந்த கர்ப்பிணிப் பெண்
மேற்கு வாசலின் வழி
வலிநிறைந்த பிரார்த்தனையைச்
சொல்லிவிட்டுத் திரும்புகிறாள்

நிறைவேறிய பிரார்த்தனையுடன்
மேற்கு வாசலில் நுழைகிறாள்
பிரசவம் முடிந்த பெண்
தன் 45 நாள் குழந்தையுடன்

மாலை நேரத்தில்
கோபுரப் பறவைகளின் நிழல்
பிள்ளைகளின் மேல் விழக் கூடாது
என்ற அச்சம் பறவைகளுக்கும்

மேற்கு கோபுரப் படிகளைக் கடக்கும்
இரண்டு பெண்களும்
ஒருவரையொருவர்
பார்த்துக் கொள்கின்றனர்
பறவைகளைப் போல.

இரண்டு குழந்தைகளும்
கண் திறந்து தரிசிக்கின்றன
அந்தரத்தில் மிதக்கும்
பறவைகளின் கண்களை.

**சிறப்புச் சிறுகதை**

**பெ**ரிய வீடு...

எது வாசல், எது பின்புறம் என்று தெரியவில்லை. நான்கு புறமும் நுழை வாயில்கள். மதுரை மீனாட்சி அம்மன் கோயிலை மனத்தில் கொண்டு கட்டப் பட்ட வீடுபோல் தோன்றிற்று.

'நாய் ஜாக்கிரதை' என்ற பலகையைப் பார்த்தபோது, இதுதான் வாசல் புறமாக இருக்கவேண்டும் என்று அவனுக்குப்பட் டது. பாதுகாப்பு, நாய்க்கா, மனிதனுக்கா? இது பலதடவை அவன் தனக்குள் கேட்டுக் கொண்ட கேள்வி.

'கேட்'டுக்கு வெளியே நின்றான். 'நாய் ஜாக்கிரதை' என்று பலகையைத் தொங்க விடுகிறவர்கள் 'கேட்'டுக்கு வெளியே அழைப்பு மணியை வைத்திருக்க வேண் டும். இல்லாவிட்டால், உள்ளே இருப்ப வர்களை எப்படிக் கூப்பிடுவது? தெருவில் நின்றுகொண்டு 'ஐயா' என்று உரக்கக் குர லெழுப்பிக் கூப்பிட்டால் அநாகரிகமாக இருக்கும்.

அவன் சிறிது நேரம் நின்றான். யாரா வது வீட்டின் உட்புறத்திலிருந்து வெளியே வரக்கூடுமென்ற நம்பிக்கை. வீடு நிசப்த மாக இருந்தது.

அவன் கைக்கெடியாரத்தில் மணியைப் பார்த்தான். ஏழே முக்கால். ஒரு வேளை, இவ்வளவு சீக்கிரமாகக் காலையில் வந்தி ருக்கக் கூடாதோ என்னவோ? காலையில் சென்றால்தான் அவரைப் பார்க்கமுடியும் என்றார்கள். மிகவும் 'பிஸி'யாக இருக்கும் வியாபாரி, அரசியல்வாதி, ஆளும் கட்சிப் பிரமுகர். பலமுறை தொலைபேசியில் பேச முயன்றிருக்கிறான். முடியவில்லை. ஆகவேதான் அவரை இன்று எப்படி யாவது பார்த்துவிடுவது என்று வந்தி ருக்கின்றான். உள்ளிருந்து யாரும் வருவ தாகத் தெரியவில்லை.

''ஐயா...'' அவன் குரலைச் சற்று உயர்த்திக் கூப்பிடத் துணிந்தான்.

'ஐயா!' யாரும் வரவில்லை. ஒரு நாய் வந்தது. 'அல்சேஷன்'. வாசல் 'போர்டிகோ'வில் உட்கார்ந்து அவனை யாரென்று பார்த்தது; குரைக்கவில்லை. உட்கார்ந்திருந்த நிலையில் கிட்டத்தட்ட அவன் உயரம் இருக்கும். 'இவனைப் பார்த் துக் குரைத்துக் குரலைச் சிரமப்படுத்த வேண்டாம். பார்வையே போதும்' என்று அது தீர்மானித்திருக்க வேண்டும். அதன் குரைப்பைப் பெறக்கூட அவனுக்குத் தகுதி யில்லை. அவனுக்குச் சற்று ஏமாற்றமாக இருந்தது.

''ஸார்...'' அவன் ஆங்கிலத்தில் கூப் பிட்டான். அல்சேஷன் நாய்க்கு ஆங்கிலம் தெரிந்திருக்க வேண்டும்.

அல்சேஷன் அவனைத் தொடர்ந்து

பார்த்துக்கொண்டேயிருந்தது. குரைக்க வில்லை. இவனால் வீட்டுக்கு எந்த விதமான ஆபத்துமில்லை என்று அவ் வளவு உறுதி அதற்கு... சிறிது நேரம் உற்றுப் பார்த்துக்கொண்டிருந்த அது, இன்னும் அவனை அலட்சியப்படுத்துவது போல், பக்கவாட்டமாகக் கழுத்தைத் திருப்பி வீதியை நோக்கியது!

அந்த நாயின் பிறப்பின் மூலத்தைச் சந்தேகிப்பதுபோல் அதை ஆங்கிலத்தில் திட்டினான் அவன். இனத் தூய்மையைக் காப்பாற்றிவருவது போல் தோன்றிய அந்நாயை அப்படித் திட்டியிருக்கக் கூடாது என்று அவனுக்குப்பட்டது.

அல்சேஷனின் வால் தன்னிச் சையாக ஆடத் தொடங்கியது. அதன் பார்வை உட்புற மாகச் சென்றது. 'அல்லை யாண்டு அமைந்த மேனியராய்', அடர்த்தியான மீசை யுடன், ரத்தச் சிவப்பேறிய கண் களுடன், வாட்ட சாட்டமான தேக வளத்துடன், கழுத்தின் சங்கிலி யும், விரல்களின் மோதிரமும் மின்ன ஒருவர் நின்று கொண்டிருந் தார். ஆடத் தொடங்கிய வால் விரைவாய் ஆட, ஆட்டத்தின் இசையாய் குரைப்பு உச்ச ஸ்தாயி யைத் தொட, அந்நாய் அங்கு வந்து நின்றவரிடம் குழைந்து, அவரைச் சுற்றிச் சுற்றி வந்தது.





''யார் நீ?''

குரைப்பின் இரைச்சலில் அவர்தான் இக்கேள்வியைக் கேட்டாரா, அல்லது நாயின் குரைப்புதான் இக்கேள்வியாய் அவன் மனப் பிரமையில் ஒலித்ததா என்று அவனுக்கு நிச்சயமாய்த் தெரியவில்லை.

''ஐயாவைப் பாக்கணும்'' என்றான் அவன்.

''வேலை ஒண்ணும் காலியில்லே...''

''வேலைக்கு இல்லீங்க...''

அவர் சில கணங்கள் நிதானித்தார்.

''சரி, வா உள்ளே...''

அவன் நாயைப் பார்த்தான். பய உணர்வு அவன் முகத்தில் படர்ந்திருந்தது.

''பாண்டியா, போ உள்ளே'' என்று அதட்டினார் அவர். ஒரு காலத்தில் மதுரையை ஆட்டிப் படைத்த பாண்டிய மன்னர்களுக்கு இந்தக் கதி வர வேண்டுமா என்று அவனுக்குத் தோன்றியது.

'பாண்டிய மாமன்னர்' வாலைப் பின் காலில் இடுக்கிக் கொண்டு அடிபணிந்து உள்ளே சென்றுவிட்டார்.

அவன் 'கேட்'டைத் திறந்து கொண்டு உள்ளே போனான்.

'டேல் கார்னகி'யை மனத்தில் தியானித்துக் கொண்டு, மிக வசீகரமான புன்னகை செய்தவாறு, அவன் அவரைப் பார்த்துக் கைகளைக் கூப்பிக்கொண்டே, ''வணக்கங்க'' என்றான்.

அவர் மௌனமாக உள்ளே சென்றார்.

அவனும் தொடர்ந்தான்.

பெரிய ஹால். சோபா செட்டுகளும் மற்றைய அலங்கார உபகரணங்களும், அவ்வீட்டின் செல்வச் செழிப்பை உணர்த்தின.

அவர் சோபாவில் உட்கார்ந்தார். அவரருகே இருந்த மேஜையில் பெரியாரின் புகைப்படம்.

''என்ன வேணும்? சொல்லு...''

அவர் அவனை உட்காரச் சொல்லவில்லை.

''கருப்பஞ்சாவடியிலே தலித் பெரியவர்களுக்கு ஒரு ராத்திரிப் பள்ளிக்கூடம் தொடங்கலாம்னு ஒரு ஏற்பாடு... ஊருக்குப் பெரியவரு நீங்க, வந்து ஆரம்பிச்சு வச்சு வாழ்த்தினா...''

அவர் இடைமறித்தார்.

''உட்காரு...''

அவன் உட்கார்ந்தான்.

''உன் பேரென்ன?''

''வேணு...''

''மொட்டையா 'வேணு'ன்னா?''

''வேணுகோபாலன்''

''இன்னும் மொட்டையாத்தான் இருக்கு... நீ என்ன பிராம்மணப்



''கராத்தேல ப்ளாக் பெல்ட் வாங்குறதுதான் என்னோட லட்சியம்.''

''ப்ளாக்ல ஏன் வாங்கணும், நேர்மையாவே வாங்க வேண்டியது தானே.''

- அ.பேச்சியப்பன்

''சர்வர் தட்டுக்குக் கீழே எவ்வளவு 'அழுக்கு' பாருங்க!''

''நல்லதையே பாருங்க சார், தட்டுக்கு மேல இட்லி எவ்வளவு 'வெள்ளை'யா இருக்குது!''

- வெ.சீதாராமன்



பையனா?''

மௌனந்தான் இதற்குச் சரியான பதில் என்று அவனுக்குத் தோன்றிற்று.

''உனக்கு எந்த ஊரு?''

''விருதுநகர்.''

''அப்பா பேரு?''

சொன்னான். சொன்னதும் நாவைக் கடித்துக் கொண்டான். அவருக்குத் தேவையான பதில் அவருக்குக் கிடைத்துவிட்டது! அப்பாவின் பெயருடன் சாதி ஒட்டிக் கொண்டிருந்ததே!

''அதென்ன தம்பி, தலித் பெரியவங்கன்னு அவங்க சாதியைச் சொல்றே, உன் சாதியைச் சொல்லக்கூடாதா? ஏன் சங்கடப்படுறே?''

''தலித்னா சாதியில்லே, ஒடுக்கப்பட்ட இனம்னு அர்த்தம். இந்தியா பூரா இருக்குது. அந்த அர்த்தத்திலே சொன்னேன்...'' என்றான் வேணு.

அவர் சிறிது நேரம் பேசாமலிருந்தார்.

பிறகு உள்ளே பார்த்துக் குரல் கொடுத்தார். ''சுந்தரேசா, ரெண்டு காப்பி எடுத்தா...''

''எனக்கு வேண்டாங்க, நான் காப்பி குடிக்கறதில்லே...'' என்றான் வேணு.

அவர் அவனை ஏற இறங்க சில விநாடிகள் பார்த்தார்.

''அப்படியா? ஒண்ணு கொண்டாடா போதும்...'' என்றார்.

''நானும் உன்னோட சாதிதான், தெரிஞ்சுதான் வந்தியோ?'' என்றார் அவர்.

''இல்லீங்க, எனக்குச் சாதியிலே நம்பிக்கையில்லே...'' என்றான் வேணு சற்று அழுத்தமாக.

''எனக்கு மட்டுமா நம்பிக்கை இருக்குது, இங்கே யார் படம் இருக்குது பாத்தியா?'' என்று பெரியார் படத்தைச் சுட்டிக்கொண்டே சொன்னார், ''நம்பிக்கை வேறே, நடைமுறை நிலவரம் வேறே... ரெண்டையும் போட்டுக் குழப்பிக்கக் கூடாது... சரி, உன்னைப் பத்திச் சொல்லு... படிச்ச பையனா தெரியுது. இதென்ன, ராப் பள்ளிக்கூடம், பகல் பள்ளிக்கூடம், அதுவும், யார்க்குன்னு சொன்னே, 'தலித்' பெரியவர்களுக்கு?'' என்று கேட்ட அவர் முகத்தில் ஏளனப் புன்னகையின் கீற்று லேசாகப் படர்ந்தது.

''படிச்சவங்க செய்யாமே வேறு யாரு செய்வாங்க...? நம்ம நாடு முன்னேற வேண்டாமா? நீங்க இந்த வட்டாரப் பெரியவரு, அரசியல்லே இருக்கீங்க, நீங்களே இப்படிப் பேசினா...'' என்ற அவனை, அவர் மீண்டும் இடைமறித்தார்.

''தப்புன்னு சொல்லலே தம்பி, நீ தப்பா

புரிஞ்சுக்கிட்டே, இதென்ன உனக்கு முழு நேர வேலையா, இல்லாட்டி, வேற வேலை செய்துக்கிட்டே இதைச் செய் யறியான்னு கேட்டேன்... புரியுதா?''

''இல்லீங்க. சமூகப் பணிதான் என் முழு நேர வேலை. அதிலேதான் நான் பட்டம் வாங்கியிருக்கேன். இதைத்தான் செய்யணுங்கிறது என் விருப்பமும் கூட.''

''நீ என்ன கட்சி?''

''ஒரு கட்சியுமில்லீங்க... மக்களுக்கு நல்லது செய்யணுங்கிற கட்சின்னு வேணும்னா வச்சுக்கங்க...''

காப்பி வந்தது. நிதானமாகக் குடித்தார்.

''அப்போ, கட்சியிலே இருக்கிறவங்க மக்களுக்கு நல்லது செய்யலேங்கிறே, அதானே?'' என்றார் காப்பித் தம்ளரைப் பக்கத்து மேஜையில் வைத்துக்கொண்டே.

''நான் அப்படிச் சொல்லலீங்க, கட்சி யிலே இல்லாமலேயும் மக்களுக்கு நல்லது செய்ய முடியும்ங்கிறேன்... கட்சியிலே இருக்கிறதும், இல்லாமலே இருக்கிறதும் அவங்க அவங்க பிரியம்'' என்றான் வேணு.

''டேய், சுந்தரேசா, காப்பித் தம்ளரை எடுத்திட்டுப் போ'' என்று குரல் கொடுத்து விட்டு அவர் எழுந்தார். தானும் எழுந்து போக வேண்டியதுதானா என்று வேணுவுக்குப் புரியவில்லை.



**எப்படி எழுதினாலும்**
**எந்தக் கவிதையாலும்**
**அலங்கரிக்க முடியவில்லை**
**நீ இல்லாத நொடிகளை**

**- சகா**

அவர் அவிழத் தொடங்கியிருந்த வேட்டியை இறுகக் கட்டிக்கொண்டு உட்கார்ந்தார்.

காப்பித் தம்ளரை எடுத்துச் சென்றான் சுந்தரேசன்.

''தம்பி... உன் பேர் என்ன சொன்னே? ஹாங்... வேணு! உன்னை வேணுன்னு தானே கூப்பிடுவாங்க...? தம்பி வேணு! என்னைப் பாக்க வர்றவங்க பெரும்பாலும் பணம் பிடுங்கத்தான் வருவாங்க. இங்கே மாநாடு நடக்குது, அங்கே மாநாடு நடக் குது, இந்தத் தலை வருது, அந்தத் தலை வருதுன்னு சொல்லிக்கிட்டு... பணம் கொடுக்காமலியும் இருக்க முடியாது, என் யாவாரம் நடக்கணுமில்லே? அதுவும் இந்தத் தடவை, நடக்கப் போற தேர் தலுக்கு சீட்டு தரேன்னுருக்காங்க... எதுக் குச் சொல்ல வரேன், நீ வித்தியாசமான பையனா இருக்கே, நீ என்னைப் பணம் கேக்கலே, உன்னோட பள்ளிக்கூடத்தை ஆரம்பிச்சு வைக்கக் கூப்பிட்டே, இல்லியா...? ஆமாம், பள்ளிக்கூடம் நடத்த பணம் வேணாமா, அதை எப்படி நடத்தப் போறே?'' என்றார் அவர்.

''பஞ்சாயத் போர்ட் அவங்க நடத்தற பள்ளிக்கூடத்திலே இடம் தராங்க... இது ராத்திரிப் பள்ளிக்கூடந் தானே? எழுதப் படிக்க மட்டுமில்லே, சுற்றுப்புறத்தைத் தூய்மையா வச்சுக்கிறது எப்படி, பொது நலச் சுகாதாரம்... எல்லாந் தான் சொல்லித் தரப் போறோம்...''

''போறோம்'னா?''

''என் கூட இன்னும் ரெண்டு பேர் இருக்காங்க... என் கூடப் படிச்சவங்க...

சேர்ந்துதான் செய்யறோம்... எங்க கிட்டே கொஞ்சம் பணம் இருக்கு, போகப் போக பாத்துப்போம்...

இப்பவே படிக்க நூறு பேர் காத்துக்கிட்டிருக்காங்க.... கருப்பஞ்சாவடியைச் சுத்தியுள்ள கிராமங்கள்லேர்ந்தும் வருவாங்க...'' என்றான் அவன் உற்சாகமாய்.

''அப்போ உன் கையிலே தலித் சனங்களுடைய 'வோட்'டெல்லாம் இருக்குதுன்னு சொல்லு'' என்றார் அவர் புன்னகையுடன்.

விஷயம் வேறு திசையை நோக்கிப் போய்க்கொண்டிருப்பதை உணர்ந்தான் வேணு.

''தேர்தலுக்கும் இதுக்கும் சம்பந்தமில்லீங்க... நாங்க செய்யறது, ஒடுக்கப்பட்ட மக்களுக்கு ஒரு விழிப்புணர்ச்சியை உண்டாக்கணும்னு... அவ்வளவுதான், இது தேர்தலை மனசிலே வச்சுகிட்டு செய்யலே...'' என்றான் வேணு.

''ஏன் தேர்தலை மனசிலே வச்சுகிட்டு செய்யக்கூடாது? அவங்க முற்போக்கான சீர்திருத்தவாதிகளுக்கு வோட்டு போட்டாத்தானே அவங்களுக்கு ஒரு நல்ல அரசாங்கம் கிடைக்கும்? இதையும் அவங்களுக்கு எடுத்துச் சொல்லணும், தம்பி... இந்த மாசக் கடைசியிலே இங்கே சாதி ஒழிப்பு - மூட நம்பிக்கை ஒழிப்பு மாநாடு நடக்கப் போவுது... நான்தான் நடத்தப் போறேன்...

''உங்க பையன் வீட்டுல இருந்து காசு எடுத்துட்டு வந்து எல்லாப் பையன்களுக்கும் கொடுக்கிறான்!''

''அப்ப வருங்காலத்தில் எலக்ஷன்ல நின்னு ஜெயிப்பான்னு சொல்லுங்க!''

-தென்றல் கோ.சண்முகசுந்தரம்



தலைவரும் கலந்துக்கப் போறாரு... இதெ நீ உன் 'தலித் பெரியவர்களுக்கு' எடுத்துச் சொல்ல வேணாமா? அப்போதானே அவங்க பாத்து சரியா வோட்டு போட முடியும்..?''

வேணு பதில் கூறாமல் மௌனமாயிருந்தான்.

''இதோ பாரு, வேணு... நீ, உன் கூட்டாளி எல்லாரும், சின்னவங்க. உங்க பணத்தை வச்சுகிட்டு ஒண்ணும் நடத்த வேணாம்... நானே அந்தப் பள்ளிக்கூடம் நடத்தற செலவெல்லாம் ஏத்துக்கிறேன்... போதுமா...? ராப்பள்ளிக்கூடம், பகல் பள்ளிக்கூடம், அப்புறம் என்னென்னவோவெல்லாம் சொன்னியே, அதெல்லாம் நீ நட்த்திக்கிட்டிருக்கிறபடி நடத்திக்க. ஆனா, தேர்தல்லே யாருக்கு வோட்டுப் போடணும்னு மட்டும் அவங்களுக்கு விளக்கமா சொல்ல வேண்டியது உன் பொறுப்பு... அது போதும்... சரியா?''

அவர் காலடியில் படுத்திருந்த பாண்டியன் திடீரென்று எழுந்து குரைக்கத் தொடங்கினான்.

அப்பொழுது ஒருவர் வாசலிலிருந்து உள்ளே வந்தார். கழுத்தில் ருத்திராட்ச மாலை. காதில் ஒளிர்ந்த வைரக் கடுக்கன். கட்டுக் குடுமி. பஞ்சக்கச்சம்.

''நமஸ்காரம்...'' என்று சொல்லிக் கொண்டே உள்ளே வந்தார்.

''வணக்கம்... வாங்க அய்யரே... இன்னிக்கு என்ன 'லேட்'டு?''

''கோயில்லே கொஞ்சம் வேலை இருந்தது.''

அய்யர், வேணுவை அவன் யாரென்றறியும் பார்வையுடன் நோக்கினார்.

''இவரும் எங்க சாதி பையன்தான். சமூக சேவை செய்யறாரு...''

''பேஷா செய்யட்டும். ஈஸ்வர அனுக்கிரகம் நிச்சயமா உண்டு. பிரஸாதம் வாங்கிண்டு போங்கோ'' என்று வேணுவைப் பார்த்துக் கூறினார் அய்யர்.

''பிரசாதமா?'' என்று ஒன்றும் புரியாமல் கேட்டான் வேணு.

''அய்யரு ஒவ்வொரு சனிக்கிழமையும், காலையிலே வந்து சனி பகவானுக்குப் பூசை செய்திட்டுப் போவாரு, அந்தப் பிரசாதத்தைச் சொல்றாரு.''



**"அய்யா தேர்தல்லே நிக்கப் போறாரு. மந்திரிப் பதவி கொடுக்காம போகமாட்டான் சனி"**

''அய்யாவுக்கு ஏழரை சனி. முடியப் போறது. கடைசி இரண்டரை வருஷம் பொங்கு சனின்னு சொல்லுவா. அய்யா தேர்தல்லே நிக்கப் போறாரு, மந்திரிப் பதவி கொடுக்காம போகமாட்டான் சனி'' என்றார் அய்யர்.

''இதைப் போய் தம்பிகிட்டே எதுக்குச் சொல்றீங்க? என் மாதிரி தம்பிக்கும் இதிலெல்லாம் நம்பிக்கை இல்லே. ஏதோ, நான் என் நயினாவுக்குக் கொடுத்த வாக்கு, காப்பாத்திக்கிட்டிருக்கேன், அப்படித் தானே அய்யரே?''

''ஆமாமாம், உங்களுக்கு ஏது நம்பிக்கை? நீங்க நன்னா இருக்கணும்னு, என் திருப்திக்காக நான் செய்யறேன் இந்தப் பூஜை, புனஸ்காரமெல்லாம்... தம்பியும் உங்க சாதி ஒழிப்பு - மூடநம்பிக்கை ஒழிப்பு மாநாட்டிலே கலந்துக்கப் போறாங்களா?''

''இல்லே... நான் வேற காரியமா வந்தேன்... சரி, அப்பொ நான் வரட்டுங்களா?'' என்று எழுந்திருந்தான் வேணு.

''எப்போ, என்னிக்கி, பள்ளிக்கூடத் திறப்பு விழா அப்படின்னு, ஒரு விவரமும் சொல்லாமே கிளம்பறியே தம்பி?''

''உங்க ஃபோன் நம்பர் என்கிட்டே இருக்கு... வேணும்னா, ஃபோன் பண்றேன்...'' என்று சொல்லிக் கொண்டே வெளியே போனான் வேணு.

''தம்பி கொஞ்சம் கிறுக்கு போலிருக்கு, திடுதிப்னு இப்படி எழுந்து போறாரே'' என்று அய்யர் சொல்வது அவன் காதில் விழுந்தது.

அவன் வீட்டு வாசலை அடைந்ததும் திரும்பிப் பார்த்தான்.

'பாண்டியன்' நின்று கொண்டிருந்தார். இப்பொழுது 'அவர்' அவனைப் பார்த்துக் குரைக்கத் தொடங்கினார். ●

# நூல் அறிமுகம்

# சிறகிழந்த சொற்கள்!

**மௌனங்களால் மொழி நெய்து**

**மா.மீனா சுந்தர், வயல் வெளியீடு, பழைய எண் 92, பைக்கிராப்ட்ஸ் ரோடு, திருவல்லிக்கேணி, சென்னை-600 005.**

'மௌனங்களால் மொழி நெய்து' தந்துள்ள கவிதைகள் அகம், புறம் எனப் பல தளங்களில் உரக்கச் சத்தமிடுகின்றன; மென்மையாகப் பேசுகின்றன; சில இடங்களில் மௌனிக்கின்றன; மௌனத்தைத் தருகின்றன. 'பூட்டிய கதவின் அகமும் புறமுமாய் நாம்', 'துவண்டு கிடக்கிறதென் சிறகிழந்த சொற்கள்' - அழகியல் நிரம்பிய சொற்களைக் கோக்கின்றன சில வரிகள். அவற்றையும் தாண்டி சில வரிகள் தம்மைச் செதுக்குகின்றன படிப்பவர் மனத்தில். 'அறுவடை நடந்த வயல் தாள்களில் குனிந்தவாறே வாழ்வின் வலிமையான கவிதையை வரைந்து கொண்டிருக்கிறாள் நெல் பொறுக்கும் கிழத்தி!'









**ஒரு மகானின் அவதாரம்**

**கே.எஸ்.ரமணா, ரமணா பதிப்பகம், 'விக்னேஷ்வராலயா', 2/1, என்.ஜி.ஓ. நகர், சின்ன திருப்பதி, சேலம்.**

'நான் யார்?' என்ற கேள்வியை எழுப்பிக் கொண்ட வேங்கடராமன், விடை கண்டறியச் சென்று ரமணரான வரலாற்றைச் சொல்கிறது இந்நூல். கால அமைப்பில் சம்பவங்கள் அடுக்கப்பட்டுள்ளன. அபூர்வமான புகைப் படங்கள், சுவையான சம்பவங்கள், ரமணர் குறித்த நூல்களின் பட்டியல் என கவனமாகத் தொகுத்தளித்துள்ளார். 'ரமணர் யார்?' என அறிய விரும்புவோர்க்கு இந்நூல் அற்புதமான வழிகாட்டி.

**ஒவ்வொரு நாளும் ஒவ்வொரு சுவை**

**வசந்தா விஜயராகவன், விகடன் பிரசுரம், 757, அண்ணா சாலை, சென்னை - 600 002.**

காலை டிஃபனுக்கு அவல் தோசை, லஞ்சுக்கு ஜீரா ஃப்ரைட் ரைஸ், சாயங்காலம் சாப்பிட கேசர் ரச மலாய், டின்னர் வெண்டைக்காய் மசாலா பராத்தா, இடையில் ஒரு கேரட் ஐஸ்கிரீம். தினசரி சாப்பிட இப்படி வெரைட்டியான மெனு இருந்தால் வாழ்க்கை எவ்வளவு சுவையாக இருக்கும்? இதுபோன்ற உணவு வகைகள் செய்யக் கற்றுத் தருகிறது இந்நூல். குட்டி குட்டி டிப்ஸும், கலர்ஃபுல் படங்களும் 'டேஸ்டி' லைஃபுக்கு இன்விடேஷன்.

**- நேயமுகில்**

# வெட்கம்...நாணம்... என்ன வித்தியாசம்?

ஒரு எழுத்து வித்தியாசத்துல அட்டகாசமா இப்படி ஒரு விஷயமா?

● **ஸ்வேதா, சென்னை**

***எமன் நேரில் தோன்றி உங்களிடம் கேள்வி மேல் கேள்வி கேட்டால் என்ன பதில் சொல்வீர்கள்?***

''ஏன்யா... கேள்வி கேட்டு 'உயிரை வாங்கற...?'என்று பதில் கேள்வி கேட்பேன்!

● **வி.ஜி.சத்தியநாராயணன், நங்கநல்லூர்**

***பெண், புயல் என்ன ஒற்றுமை?***

'புயலுக்கு முன்னும் அமைதி, பெண்ணுக்கு முன்பும் அமைதி' என்கிறார், மையம் கொண்ட பெண் புயல் மீது மையல் கொண்ட ஆண் புயல்.

● **அ.ஷண்முகசுந்தரம், பெங்களூர்**

***வெட்கத்துக்கும், நாணத்துக்கும் என்ன வித்தியாசம்....?***

வெட்கம் Shyness; நாணம் Sheness!

● **ஆர்.ஆர்.தமன், சென்னை**

***சென்னையை விட்டு வேறு ஊரில் செட்டில் ஆக வேண்டிய நிர்ப்பந்தம் வந்தால், உங்கள் சாய்ஸ்?***

அந்த நிர்ப்பந்தத்தை சாய்ஸில் விட்டு விடுவேன். அதையும் மீறிப் போக வேண்டி வந்தால், மனைவியை அழைத்துக் கொண்டு போய் விடுவேன். மோகனுக்கு மனைவி இருக்குமிடம் மைலாப்பூர். (''ஏதோ ஆர்..ஆர்.தமன் புண்யத்துல ஊருரா போயிண்டுருக்கோம்... இல்லாட்டி நீங்களாவது சென்னையை விட்டு நகர்றதாவது... ஹ‍ூம்'' முகவாயால் தோளில் இடித்தபடி மனைவி)

● **ஆர்.கே.லிங்கேசன், மேலகிருஷ்ணன்புதூர்**

***ஏன் இரேஸி 'ஸி' தமிழா....?***

'Zee- தமிழ்' இருக்கும்போது 'ஸி-தமிழும்' இருந்து விட்டுப் போகட்டுமே!

● **அ.சுப்ரமண்யம், கோயம்புத்தூர்**

***வைணவர்கள் ஏன் சபரிமலைக்குச் செல்வதில்லை?***

யார் சொன்னது? என்னையும் சேர்த்து நிறைய பேர் போகிறார்கள். இன்னும் சொல்லப் போனால், சபரிமலைக்கு முதன் முதலில் சென்றதே ஒரு வைணவர்தான். மகாவிஷ்ணுவின் அம்சமான ஸ்ரீராமன். அவருக்குப் பிறகுதான், அவருக்குப் பிறந்த அரிஹரன் சென்றார். சபரிமலை செல்லும் பக்தர்களின் தேசியகீதமான, வீரமணி சாரின் 'பள்ளிக் கட்டு' பாடலில் 'பார்த்தசாரதியின் மைந்தனே உனைப் பார்க்க வேண்டியே தவமிருந்தோம்' வரிகளை மறந்து விட்டீர்களா? சாஸ்தா வானவர் சர்வ மதத்துக்கும் தோஸ்தானவர்.

● **வேலுச்சாமி, திருவண்ணாமலை**

**வர வர 'செல் ஃபோனை' பாத்ரூம் போகும்போதுகூட எடுத்துக்கிட்டு போறாங்களே கிரேஸி?**

'நேச்சர்ஸ்-கால்' வந்தா அட்டெண்ட் பண்ண எடுத்துக்கிட்டுப் போறாங்களோ என்னவோ!



● **எஸ்.கோபாலன், நங்கநல்லூர்**

**ஜான் ஏறினா முழம் சறுக்குதுன்னு சொல்றாங்களே... என்ன அர்த்தம் கிரேஸி...?**

என்னைக் கேட்டா? Johnனைத்தான் கேக்கணும்...!



# கிரேஸியைக் கேளுங்கள்

● **ஆர்.கோபாலன், மேற்கு மாம்பலம்**

**பிறந்த வீட்டுக்குக் கொடுப்பதில் பெண்களின் கை 'கருணைக் கிழங்கு' தானே?**

மாமனார், மாமியார், கணவன், குழந்தைகளுக்காக, புகுந்த வீட்டில் காலில் சக்கரம் கட்டிக் கொண்டு ஓடும் 'உருளைக் கிழங்கு'!

● **வாசுதேவன், அயிரோலி**

**விட்டில் பூச்சியின் வாழ்க்கை....?**

எந்த தவறும் செய்யாமல் ஜோதியில் கலக்கும் ஒரே ஜீவ ராசி. விட்டில் பூச்சிகளான நமக்குத் தொட்டில் பழக்கம் சுடுகாடு வரைக்கும். விட்டில் பழக்கம் விளக்கு வரைக்கும்!

● **ம.வேல்விழி, ஜமுனாமரத்தூர்**

**எது உயர்ந்த கருணை?**

கிழங்குக்குக் காட்டும் கருணை.

05.07.09 முதல்

**மேஷம் :** மனநிறைவான வாரம். ஆடை ஆபரணப் பொருட்கள் வாங்குவீர்கள். நோய்நொடிகள் தீரும். மகிழ்ச்சி ஏற்படும். கடல் கடந்த மனிதர்களால் அனுகூலம் ஏற்படும். சனி / ராகு / கேது வழிபாடு நற்பலனை அளிக்கும்.

**ரிஷபம் :** உற்சாகம் மிகுந்த வாரம். கடவுள் அனுக்கிரஹம் கிட்டும். உழைப்புக்கு ஏற்ற நல்ல பலன் தரும். திருமண முயற்சி பலன் அளிக்கும். கடன் பிரச்னை தீரும். சனி வழிபாடு செய்துவர நற்பலன் அதிகரிக்கும்.

**மிதுனம் :** மனக்குழப்பத்திலிருந்து விடுதலை கிட்டும். நெருங்கிய கூட்டாளிகளை விட்டுப் பிரிய நேரிடும். வாகனங்களில் செல்லும்போது கைப் பொருள் மீது கவனம் தேவை. ராகு / கேது வழிபாடு செய்துவர நற்பலன் அளிக்கும்.

**கடகம் :** மேன்மையான வாரம். திருமணப் பேச்சுவார்த்தை பலன் அளிக்கும். கொடுக்கல் வாங்கலில் சிக்கல் தீரும். வரவேண்டிய பாக்கிகள் வசூலாகும். குடும்ப வாழ்வில் அனுசரித்துப் போவது நல்லது. ராகு / கேது / சனி / குரு வழிபாடு நற்பலனை அளிக்கும்.



**சிம்மம் :** திருமணம் தடை விலகி கைகூடும். மனபிரமை தீரும். பண வரவு அதிகரிக்கும். வாகன சுகம் கிட்டும். நண்பர் / உறவினர்கள் மூலம் உதவி கிட்டும். வழக்கு வெற்றி பெறும். எதிரிகள் ஓடி மறைவார்கள். தொட்டதெல்லாம் வெற்றியாகும். சனி வழிபாடு செய்துவர நற்பலன் ஏற்படும்.

**கன்னி :** பிரயாணம் செல்ல நேரிடும். தேவை இல்லாத மருத்துவச் செலவு வந்து சேரும். குழந்தைகள் இடம் மாறிப் போவார்கள். பூர்விகச் சொத்து பாகப்பிரிவினை ஆகும். மறைமுக எதிரிகளால் தொல்லை ஏற்படும். ராகு / கேது / சனி / குரு வழிபாடு நற்பலனைத் தரும்.

**துலாம் :** மனமகிழ்ச்சி ஏற்படும். சுபகாரியப் பேச்சுவார்த்தை பலன் அளிக்கும். கல்வி வளம் மேன்மை பெறும். நண்பர் / உறவினர்கள் மூலம் நன்மைகள் உண்டாகும். வரவேண்டிய பாக்கிகள் வந்து சேரும். ராகு / கேது / வழிபாடு செய்து வர நற்பலன் அதிகரிக்கும்.

**விருச்சிகம் :** தேவை இல்லாத வைத்தியச் செலவு வந்து சேரும். ஆரோக்கியத்தில் தொல்லை ஏற்படும். வாக்குவாதம் தவிர்க்கவும். வீடு மாற்றம் உண்டாகும். உடன்பிறப்புகள் மூலம் உதவிகள் கிட்டும். குரு / சனி வழிபாடு செய்துவர நற்பலன் உண்டாகும்.

**தனுசு :** திருமணக் காரியம் கைகூடும். நல்லவர் உதவி கிடைக்கும்.

# நடக்குமென்பார்



வரவேண்டிய பணம் வந்து சேரும். உடல் ஆரோக்கியம் சீராகும். ராகு / கேது வழிபாடு நற்பலனை அளிக்கும்.

**மகரம் :** உடல் நிலையில் கவனம் தேவை. எதிர்பாராத பணம் வந்து சேரும். உடன்பிறப்புகளால் உபத்திரவம் வந்து சேரும். வாகனங்களில் செல்லும்போது உஷார். வியாபாரத்தில் சற்று மந்தமான போக்கு காணப்படும். ராகு / கேது / குரு / சனி வழிபட்டு வர சங்கடங்கள் தீரும்.

**கும்பம் :** மனத்துக்கு சந்தோஷமான வரும். புதிய பொருட்கள் வாங்குவீர்கள். புதிய முதலீடு செய்ய நல்ல காலம். கடன் தொல்லை தீரும். வியாபாரத்தில் அபரிமிதமான லாபம் உண்டாகும். சனி / குரு வழிபாடு நற்பலனைத் தரும்.

**மீனம் :** பூர்விகச் சொத்து கைக்கு வந்து சேரும். பணக் கஷ்டம் இருக்காது. வழக்கு வெற்றி பெறும். வீடு / மனை வாங்க ஏற்ற காலம். குழந்தைகள் மூலம் சுபசெலவு உண்டு. ராகு / கேது வழிபட்டு வர நற்பலன் அதிகரிக்கும்.



11.07.09 வரை

# நடக்கும்!

தஞ்சை பரத்வாஜ்



"சனி ஞாயிறு வந்துட்டாலே என் மனைவி டென்ஷன் ஆயிடறா..."

"ஏன் உங்களுக்கு ஆபீஸ் லீவுங்கறதாலா?"

"ஊகூம்... டீ.வி. சீரியல் எதுவும் இல்லைங்கிறதால!"

- சீர்காழி வி.ரேவதி



"இன்னிக்கு நம்ம திருமண நாள்... மறந்துட்டீங்களா?"

"கருப்பு பேட்ஜ் குத்தி இருக்கேனே எதுக்குன்னு நெனச்சே?"

- போளூர் ஆர்.பஞ்சவர்ணம்

# தொகுதிக்குத்



"நான் அரசியலை விட்டு விலகியதுபத்தி ஜனங்க என்ன பேசிக்கிறாங்க?"

"இப்பதான் நம்ம தொகுதிக்குச் சுதந்திரம் கிடைச்சுருக்குன்னு சொல்றாங்க!"

- அதிரை புகாரி



"இந்த மாத்திரை எதுக்கு டாக்டர்?"

"நீங்க இந்த ஹாஸ்பிடலை மறக்காம இருக்கத்தான்!"

- அம்பை தேவா

‘‘என்னங்க! வீட்டோட வேலைக்காரி கிடைப்பாங்களா...?’’

‘‘உங்களுக்குத்தான் வீடே கிடையாதே...!’’

‘‘அதனால்தான் வீட்டோட கேட்டேன்!’’

-ஆர்.பஞ்சவர்ணம்





‘‘ஏன்டா நம்ம ஜிம்மிக்கு சோறு வைக்கும்போது ‘லொள்... லொள்...ன்னு கத்தறே?’’

‘‘பக்கத்து வீட்டு பாலு, காக்காவுக்கு சோறு வைக்கும்போது கா...கா...கா...ன்னு கத்திட்டுதானே வெச்சான்!’’

- வெ.சீதாராமன்

# அதந்திரம்!



‘‘உங்க ஆபீஸ்ல கஷ்டமான வேலை எது?’’

‘‘சம்பளம் வாங்கறதுதான்!’’

- வீ.விஷ்ணுகுமார்

‘‘என் மனைவியை நான் டீ போட்டுத்தான் கூப்பிடுவேன்! நீங்க...?’’

‘‘என் மனைவிக்கு காப்பிதான் பிடிக்குங்கறதால நான் காப்பி போட்டுட்டுத்தான் கூப்பிடுவேன்!’’

- ராசை உ.குணசீலபாண்டியன்





# பண்ணை வளர்ப்பு; பணியா

ஆந்த்ராக்ஸ்... பறவைக் காய்ச்சல்... இரண்டும் உலகை உலுக்கிய அதிர்வு மறையும் முன்பு விமானம் விமானமாக 'விசிட்' அடித்துக் கொண்டிருக்கிறது 'ஸ்வைன் ஃப்ளு'. இப்படி மிருகங்களிடமிருந்து அடுத்தடுத்து நோய்கள் மனிதர்களைத் தாக்க என்ன காரணம்?

''மனிதனின் தேவையும் பேராசையும்தான் முக்கியக் காரணம். சுற்றுச் சூழல் நாளுக்கு நாள் மோசமாகி வருகிறது. அதே நேரத்தில் விலங்குகளுக்கும், மனிதர்களுக்கும் இடையிலான நேரடித் தொடர்பு அதிகரித்து வருகிறது. இறைச்சிக்காக கால்நடைகளின் எண்ணிக்கையை அதிநவீன முறைகளில் பெருக்குகிறோம்'' என்று குற்றம்சாட்டுகிறார் நபார்டு வங்கியில் பொது மேலாளராகப் பணியாற்றி ஓய்வு பெற்ற கால்நடை மருத்துவரான டாக்டர் சேதுராமன்.

''பத்தாண்டுகளுக்கு முன்பு, கோழிப் பண்ணைகளில் ஒரு கோழிக்கு ஆறு சதுர அடி இடம் இருக்கும். அது இப்போது அரை சதுர அடியாகக் குறைந்து விட்டது. கோழிகள் சுதந்திரமாகத் திரிந்த காலம் மாறி, பண்ணைகளில் தனக்குரிய கூண்டிலேயே மூச்சுமுட்ட வளர்ந்து, இறைச்சியாகும் நிலை.

ஒரு கன்றுக்குட்டிக்கு ஒரு நாளுக்கு ஒரு லிட்டர் பால் போதும். மனித தேவைக்காக 25 லிட்டர் பால் கறக்கும் அளவுக்கு வீரிய மாடு வகைகளை உருவாக்கி இருக்கிறோம். மாடுகளை மேய்ச்சல் நிலங்களில் மேய விடாமல், பண்ணைகளிலேயே அடைத்து வைக்கிறோம். நமக்கு என்ன தேவையோ அதற்கு ஏற்ப, அவற்றின் இயல்பான வாழ்க்கை முறையை மாற்றிவிட்டோம். மனிதர்களைப் போலவே, விலங்குகளின் வாழ்க்கையும் அழுத்தம் நிறைந்ததாகிவிட்டது! இதனால் அவற்றின் உடற்கூறு பல மாற்றங்களுக்குள்ளாகிறது. அவற்றைப் பாதிக்கும் எந்த ஒரு நோயும், சட்டென்று மனிதர்களுக்குத் தொற்றிக் கொள்ளும் வாய்ப்பு பன்மடங்கு அதிகரித்து விட்டது'' என்கிறார் டாக்டர் சேதுராமன்.

''மனிதர்களைத் தாக்கும் நோய்களுக்குரிய வைரஸ்களை விலங்குகளின் உடம்பில் செலுத்தினால், அந்த வைரஸ்களை எதிர்க்கும் சக்தி விலங்குகளுக்கு

**மனிதர்களைப் போலவே, விலங்குகளின் வாழ்க்கையும் அழுத்தம் நிறைந்ததாகிவிட்டது! இதனால் அவற்றின் உடற்கூறு பல மாற்றங்களுக்குள்ளாகிறது.**




# வைரஸ்; பன்றிக் காய்ச்சல்!

அதிகரிக்கும். அதைக் கொண்டு வேக்சின்கள் உருவாக்குவது வழக்கம். ஆனால், விலங்குகளை நவீன முறைகளில் அதிவேகமாகவும், அபரிமிதமாகவும் பெருக்குவதால் விலங்குகளுக்கு நோய் எதிர்ப்பு சக்தி குறைந்து, அவற்றின் உடல்களில் வைரஸ்கள் தங்கி, பெருகுவது சுலபமாகி விட்டது. நாளடைவில், இந்த வைரஸ்கள் மிகவும் பலம் பெற்று சிறு சிறு மாற்றங்களுக்கு உள்ளாகி புதிய வைரஸ்களாக உருமாறிவிடுகின்றன. ஆபத்துக்களை ஏற்படுத்துகின்றன. இதனால், ஏற்கெனவே உள்ள மருந்துகளைப் பயன்படுத்தும்போது அவை எதிர்பார்த்த பலனை அளிப்பதில்லை'' என்று பிரச்னையின் இன்னொரு பரிமாணத்தை விளக்குகிறார் சென்னை கால்நடை மருத்துவக் கல்லூரியின் ஓய்வுபெற்ற பேராசிரியர் விஸ்வநாதன்.

இதுபோன்ற நோய்கள் மேற்கத்திய நாடுகளிலிருந்தே வருகின்றனவே?

''இந்தியாவைப் போல இறைச்சியை அதிக உஷ்ணத்தில் சமைத்துச் சாப்பிடும் பழக்கம் மேற்கத்திய நாடுகளில் இல்லை. எனவே, விலங்குகளின் உடம்பில் இருக்கும் வைரஸ்கள் சுலபமாக மனித உடலுக்குள் புகுந்து விடுகின்றன. ஆகவேதான், இப்போது அங்கேயும், நோய்த் தாக்குதல்களிலிருந்து தப்ப, இறைச்சியை நன்றாகச் சமைத்து உண்ணும்படி அறிவுறுத்தப்படுகிறார்கள்.

ஆந்த்ராக்ஸ் என்பது இருநூறு ஆண்டுகளுக்கு மேலாக இருக்கிறது. அந்தக் காலத்தில் ரோமம் மிகுந்த ஆடுகளின் உடலில் அதன் கிருமிகள் இருக்கும். ஆடுகளின் உடலிலிருந்து ரோமத்தை எடுப்பவர்களை மட்டும் அது தாக்கும். ஆனால், காலப்போக்கில் ஆந்த்ராக்ஸ் கிருமி பரிணாம வளர்ச்சி பெற்று, மனித இனத்தையே பயமுறுத்தும் பூதாகரமான ஒன்றாகிவிட்டது. சுயநலத்துக்காக உற்பத்தியைப் பெருக்கிவிட்டு, பறவைக் காய்ச்சல் என்றவுடன் நம்மைக் காப்பாற்றிக் கொள்ள ஆயிரக்கணக்கான கோழிகளைக் கொடூரமாகச் சமாதி கட்டுகிறோம்'' என்று வேதனையுடன் சொல்கிறார் சேதுராமன்.

– எஸ்.சந்திரமௌலி



* சேதுராமன்



* விஸ்வநாதன்

# கிண்டல் காலனி

# பாம்பு... பல்லி... ஃபைட்!

*(ரஜினி-கமல் இருவரும் இணைந்து நடிக்கும் புதுப்படத்தை ராம.நாராயணன் தயாரிக்க, இயக்குநர் ஷங்கர் இயக்குகிறார். அதற்கான கதை விவாதம் நடக்கிறது.)*

**ஷங்கர்:** ரஜினி ஸார் வந்துட்டார்னா கதையைப் பிரிச்சு மேய்ஞ்சிடலாம். இன்னும் ஆளைக் காணோமே.

**ரஜினி:** *(ஸ்டைலாக நடந்து)* ஹா... ஹா... கண்ணா... எப்ப வருவேன்? எப்டி வருவேன்னு எனக்கே தெரியாது. ஆனா வரவேண்டிய...

**ராம.நாராயணன்:** அதான் வந்துட்டீங்களே... உட்காருங்க ஸார்... அடுத்து கமல் வரணுமே.

*(அப்போது வாசலில், 'ஐயா தர்மம் பண்ணுங்கையா' என்ற சத்தம் கேட்டு ஷங்கர் வெளியே வருகிறார்.)*

**ஷங்கர்:** யோவ் பிச்சை உம்பாட்டுக்கு நான் டிஸ்கஷன் பண்ற தெருவுக்கு வந்திருக்க...? 'ஐடெண்டிடி கார்டு' இருக்கா...?

**பிச்சைக்காரன்:** அது எதுக்கு சாமி?

**ஷங்கர்:** ஷூட்டிங்ல மட்டுமில்ல கதை விவாதம் பண்ணும்போதும் என் கம்பெனி கார்டு இருந்தாத்தான் தெருவுக்குள்ள வரணும். அது தாலி கட்டிய என் தாரமா இருந்தாலும் சரி. கதை திருட்டுப் போயிடும். அதான் இப்படி.

*(அப்போது 'பிச்சைக்காரன்' மேக்கப்பைக் கலைத்து, கமல் சிரிக்கிறார்.)*

**கமல்:** ஏமாந்துட்டியா ஷங்கர்... எப்படி என் மேக்கப்..?

**ஷங்கர்:** தசாவதாரம் நடிச்சாலும் நடிச்சீங்க... மாறுவேஷம் போடறதை விடமாட்டேங்கறீங்களே...

*(கமலும் உள்ளே வந்து அமர்ந்ததும் விவாதம் தொடங்குகிறது.)*

**ஷங்கர்:** கதை சொல்றேன் கேட்டுக்கங்க. ஒரு வேளை சோத்துக்கு வழியில்லாத பையன் பாராசூட்ல வந்து பள்ளிக்கூடத்துல எறங்குறான்.

**கமல்:** சோறு இல்லை ஆனா பாராசூட்ல வர்றான். வர்றது சரி... ஆனா எதுக்கு வர்றான்னுதான் தெரியலை.

**ஷங்கர்:** பத்தாவது பாஸான ரெகார்ட் ஷீட் வாங்க வர்றான்.

**கமல்:** லாஜிக் ரொம்ப இடிக்குது... பத்தாவதை பதினொண்ணுன்னு மாத்திக்கங்க...

**ரஜினி:** எனக்கு ஓப்பனிங் ஷாட் எப்டி வெச்சிருக்கீங்க...?

**ஷங்கர்:** இருக்கே... ஸீன் ஓப்பனிங்ல பரங்கிமலைல வைரக் கல்

உடைக்கறீங்க.

**கமல்:** பரங்கிமலைல பாறாங்கல்லுதான் இருக்கும். அதைத்தான் உடைக்க முடியும்.

**ஷங்கர்:** அது மத்தவங்க படத்துல... என் படத்துல ஹீரோ வைரக் கல்தான் உடைக்கணும். இல்லேன்னா ஜனங்க ஏத்துக்கமாட்டாங்க. அதனால பரங்கிமலைக்கு பெயிண்ட் அடிச்சு வைர மலையா மாத்துங்க.

**நாராயணன்:** *(அதிர்ச்சியுடன்)* மலைக்கு பெயிண்ட் அடிக்கிறதா...! அப்படின்னா ஹீரோ கல் உடைக்காம, மரம் உடைக்கிற மாதிரி மாத்தினா என்ன...?

**ஷங்கர்:** அப்போ சந்தன மரம் உடைக்கற மாதிரி காட்டணும். நூறு டன் மரம் வாங்கித் தருவீங்களா..?

**கமல்:** எனக்கு எப்படி ஓப்பனிங்...?

**ஷங்கர்:** மைக்கேல் ஜாக்ஸன் கெட்டப்ல கடல்ல இருந்து எந்திரிக்கிறீங்க... செத்துப்போன ஜாக்சனே நேர்ல வர்றமாதிரி தெரியணும்.

**கமல்:** வேஷம் போடறதெல்லாம்



எனக்கு லோஷன் தடவற மாதிரி.

**ஷங்கர்:** அப்புறம் நாராயணன் ஸார்... ஷூட்டிங்குக்கு முக்கியமா என்னென்ன தேவைன்னு சொல்லிடறேன் எழுதிக்குங்க.

**நாராயணன்:** சொல்லுங்க... சொல்லுங்க.

**ஷங்கர்:** அமெரிக்க 'ஃப்ளைட்' புதுசு ஏழு எழுதிக்கங்க. அப்படியே கனடா கப்பல் பத்து. க்ரவ்டுக்கு ஜூனியர் ஆர்டிஸ்ட் வேணும். துபாய்ல இருக்கிற மொத்த மக்கள் தொகையும் கொண்டு வரணும்.

**நாராயணன்:** ஐயய்யோ... இதுக்கெல்லாம் நான் எங்க போறது?

**ஷங்கர்:** எதுக்கு பீதியாகறீங்க? ஐந்நூறு கோடி பட்ஜெட்ல படம் எடுத்து 501 கோடி சம்பாதிச்சுக் கொடுக்க மாட்டேனா என்ன... தாராளமா செலவு செய்யுங்க... எவ்வளவு ப்ரொடியூசரைக் காப்பாத்தியிருக்கேன்.

**ரஜினி:** சுத்திச் சுத்தி பறந்து பறந்து அடிக்கிற மாதிரி ஃபைட்டு எனக்கு இருக்கா..?

**ஷங்கர்:** வித்தியாசமான ஃபைட் இருக்கு. நின்ன இடத்துல கால் கைய மட்டும் தூக்கறீங்க... வில்லன்கள் பறந்து வந்து அடிவாங்கிட்டு தெறிச்சு விழுறானுங்க.

**கமல்:** அப்போ எனக்கு?

**ஷங்கர்:** சிங்கப்பூர் செட்டு போட்டு அதுல பாட்டு உண்டு. அப்புறம்... பட்ஜெட் முடியல எழுதிக்கங்க... ரெண்டாயிரம் ஸ்டில் கேமரா. எழுபது 'அகேலா' கிரேன். அந்தரத்துல தொங்குற மாதிரி கண்ணாடி மாளிகை ரெண்டு. அப்புறம்...

**நாராயணன்:** ஒரு நிமிஷம் ஷங்கர். ஃப்ளைட்டுக்குப் பதிலா ரிமோட் கன்ட்ரோல் பொம்மை ஃப்ளைட் வெச்சுக்கோங்க. கனடா கப்பலுக்குப் பதிலா காகிதக் கப்பல் வெச்சுக்கங்க. கண்ணாடி மாளிகையெல்லாம் போட முடியாது. அந்தப் பாட்டை கண்ணம்மாபேட்டைல எடுத்துக்கங்க. அப்புறம்... ரஜினி - கமலுக்குப் பதிலா விஜய் டி.வியில வர்ற டூப் ரஜினி - கமலை வெச்சுக்கங்க.... ஃபைட்டுக்குத் தேவையான பாம்பு, பல்லி, பூரான், கரப்பான்பூச்சி எல்லாம் தர்றேன்.

*(என்று சொன்னதும் ரஜினி - கமல் - ஷங்கர் மூவரும் மயங்கிச் சரிகின்றனர்.)*



**ரஜினி ஒரே இடத்துல நின்னு கை-காலைத் தூக்கறார். வில்லனுங்க பறந்து பறந்து வந்து அடிவாங்கிட்டுப் போறாங்க!**

# திரைவிமர்சனம்

பாலசந்தர், ஸ்ரீதர், பாரதிராஜா, மணிரத்னம், ஷங்கர் ஆகிய அலைகளுக்குப் பிறகு தமிழ் சினிமாவில் இப்போது சசிகுமார் அலை. சர்வதேசத் தரம் நோக்கி தமிழ் சினிமாவைப் பத்திரமாக அழைத்துச் செல்லும் பொறுப்பில் இயக்குநர் சமுத்திரக்கனியோடு இணைந்து மீண்டும் ஜெயித்திருக்கிறார் சசிகுமார்.

நண்பனின் நண்பன் எனக்கும் நண்பன் என்கிற புதிய ஒரு வரிதான் கதை. சென்னை, மதுரை, திருநெல்வேலி என்று இந்த மூன்று ஊர்களுக்குள்ளேயே ஜல்லியடித்துக் கொண்டிருந்த தமிழ் சினிமாவை, ராஜபாளையம், நாமக்கல், திருச்செங்கோடு என்று நடுநிலை ஊர்கள் பக்கம் திருப்பியிருப்பது பார்வையாளர்களுக்குப் புதிய அனுபவம். படத்தில் சசிகுமார், கஞ்சா கருப்பு தவிர அத்தனை பேரும் புதுமுகங்கள். குறிப்பாக மூன்று நண்பர்களின் குடும்ப உறுப்பினர்கள். இதனால் கதை






யோடு ஒன்றிப்போய் கதாபாத்திரங்களோடு கூடவே பயணிக்க முடிகிறது. சசிகுமாரிடம் அபாரமான ஸ்க்ரீன் ப்ரசன்ஸ். வாய் பேச முடியாத அபிநயாவை டப்பிங் குரல் உதவியுடன் பேசவைத்திருப்பது தமிழ் சினிமாவில் புதிய முயற்சி. சசிகுமாரின் அத்தை மகளான அனன்யா என்ன பிரமாதமான நடிப்பு!

அடுத்த காட்சி குறித்த படபடப்பும் எதிர்பார்ப்பும்தான் சமுத்திரக்கனியின் பெரிய வெற்றி. கூடவே காட்சிக்குக் காட்சி காமெடி. குறிப்பாக பரணியின் காமெடியில் திரையரங்கமே அல்லோலகல்லோலப்படுகிறது. வெட்டி பந்தா சின்னமணி கதாபாத்திரமும் கொண்டாட்ட மனநிலையை உருவாக்குகிறது. கதிரின் ஒளிப்பதிவு கதைக்குப் பெரிய பலம். மறக்கமுடியுமா அந்த சேஸிங் சீன்! சம்போ சிவசம்போ பாடலை, பின்னணி இசை போலப் பயன்படுத்தியது நல்ல உத்தி.

இத்தாலி, ப்ரெஞ்ச், ஈரான் படங்களில் ஏற்பட்ட மாற்றங்கள் குறித்துப் பேசுவது போல தமிழ் சினிமாவின் திருப்புமுனை என்றால் அது இந்தக் காலகட்டம்தான். வெல்க யதார்த்த சினிமாக்கள்!

- ச.ந.கண்ணன்

**பயணம்**

# சிங்கப்பூர்

**வி**டுமுறைக் கொண்டாட்டமாக ஒரு வார சிங்கப்பூர் பயணம். சென்னையிலிருந்து சரியாக நான்கரை மணி நேரம். சிங்கப்பூர் 'ஷாங்காய்' விமான நிலையம் வைர ஒளிச் சிதறலாக பருந்துப் பார்வையில் பரவசப்படுத்தியது!

அந்த விமான நிலையம், உலகிலேயே சிறந்த விமான நிலையத்துக்கான பரிசுகளைப் பலமுறை வென்றிருக்கிறது. சரியான தேர்வு தான்! தங்கப் போகும் ஹோட்டல் பெயரைச் சொல்லி வாடகைக்காரில் (பேரம் பேசாத, நிர்ணயிக்கப்பட்ட வாடகை) பறந்தோம். சாலைகளில் விர்... விர்... சர்... சர்...ரென... எண்ணற்ற வாகனங்கள் விரைய, இரவைப் பகலாக்கும் விளக்குளால் ஊரே, ஏதோ சொர்க்கபுரி போல் மாயத்தோற்றம் அளித்தது. 'சிங்கபுரி' என்று முதலில் அழைக்கப்பட்டு 'சிங்கபுரா' என மாறி, தற்போது 'சிங்கப்பூர்' என்னும் பெயர் நிலைத்துவிட்டது. நான்கு புறமும் கடலால் சூழப்பட்ட ஒரு சின்ன நாடு; சின்னத்தீவு! 45 கி.மீட்டர் நீளம், 23 கி.மீட்டர் அகலம். அவ்வளவுதான். கோவை மாவட்டத்தின் பரப்பளவுதான். மொத்த ஜனத்தொகை 35 லட்சம். இதில் எழுபது சதவிகிதம் சீனர்கள். எட்டு சதம் தமிழர்கள். மீதி மற்றவர்கள். நம்முடைய 'தமிழ் மொழி', அரசால் அங்கீகரிக்கப்பட்ட நான்கு மொழிகளில் ஒன்று. விவசாயமோ, பெரிய தொழிற்சாலைகளோ அதிகம் இல்லை. குடிக்கத் தண்ணீர் மலேசியாவிலிருந்துதான் வந்தாக வேண்டும். பிறகு எப்படி இத்தனை செழிப்பாக, நேர்த்தியாக இருக்கிறது? ஒரே பதில்... அரசின் சுற்றுலாத்துறை. உலகின் பல நாடுகளிலிருந்து தினந்தோறும் வந்து குவியும் ஆயிரக்கணக்கான சுற்றுலாப் பயணிகளை, தன் வசீகர உபசரிப்பால் திக்கு முக்காட வைத்துவிடுகிறது சுற்றுலாத் துறை! தவிர ஆண்டு முழுவதும் சீரான பருவநிலை. டாக்ஸி டிரைவர் முதல், அரசு சுற்றுலாத்துறை அதிகாரிகள் வரை பயணிகளை, தங்கள் வசீகரத் திட்டங்களால் மெஸ்மரிஸம் செய்தது போல மயக்கி, நாட்டின் வருமானத்தைப் பெருக்கிக் கொள்ளும் வித்தையில் 'டாக்டரேட்' வாங்கும் அளவுக்கு திறமைசாலிகள்! மேடு பள்ளமற்ற பளிங்கு போன்ற அகன்ற சாலைகள். நேர்த்தியான, அழகுற வடிவமைக்கப்பட்ட பாலங்கள்... சுரங்கப்பாதைகள்... சாலையின் இடது புறம் மட்டும் செல்லும் சொகுசுப் பேருந்துகள்... உலகிலேயே அதி உன்னதமாக வடிவமைக்கப்பட்ட 'மெட்ரோ ரயில்' சேவை.. தடையில்லாத மின்சாரம், நகர் முழுதும் எங்கு பார்த்தாலும் பசுமை மயம்!

இப்படி அடுக்கிக் கொண்டே போகலாம். இராணுவ ஒழுங்கு என்பார்களே அது போன்ற ஒரு கட்டுப்பாடு... விதிகளை மீறினால் கடுமையான சட்டம் பாய்கிறது.

**உலகிலேயே அதிகசலுகைகளுடன் அதிகசம்பளம்பெறும் முதலமைச்சர் சிங்கப்பூர் முதலமைச்சர்தான்!**

கணபதி கேஃப், சரவணபவன், கோமள விலாஸ், ஆனந்தபவன், காரைக்குடி உணவகம் என்று பல. சாப்பாட்டுப் பிரச்னை எதுவும் இல்லை. ஆனால் விலையோ விண்ணை முட்டுகிறது!

கிருஷ்ணன் கோயில் அமைந்திருக்கும் 'வாட்டர்லூ' தெரு - 'குவான் இம்' என்னும் சீன ஆலயம், யூதர்களின் பழைமை



• டால்ஃபின் டைவ்



## வைதேகி கண்ணன்

யான கோயில், கேத்தலிக் சர்ச் என பல மதக்கலாசாரங்கள் சங்கமிக்கும் சமய ஒற்றுமை நிகழும் இடம். மறுநாள் காலை லட்சுமி நாராயணப் பெருமாள் கோயில் சுவாமி தரிசனம். கண்ணாடி போல் பளிச்சென்ற சுற்றுப் புறம். எங்கும் ஓர் ஒழுங்கு, அமைதி. கர்ப்பகிரக பெருமாளைத் தவிர வேறு எதையும் நினைக்கத் தோன்றவில்லை. பல ஆண்டுகளுக்கு முன்னரே குடிபெயர்ந்து தமது அயராத உழைப்பால் சிங்கப்பூரின் வளர்ச்சிக்குக்

# மெஸ்மரிஸம்!

காரணமாயிருந்த 'தமிழர்கள்',பக்திப் பெருக்கோடு கட்டிய பல கோயில்கள், நமது கலாசாரத்தைப் பறைசாற்றிக் கொண்டிருக்கின்றன.

தமிழர்களின் புத்தாண்டு, பொங்கல், தீபாவளி மற்றும் சீனப் புத்தாண்டு இப்படி பல பண்டிகைகளைக் கொண்டாட அந்தந்த இடத்துக்குத் தக்கபடி அங்கங்கே ஏற்பாடுகளை அரசே சிறப்பாகச் செய்து கொடுக்கிறது. எல்லாப் பண்டிகைகளையும், அனைவரும் கலந்து கொண்டாடி மகிழ்கின்றனர்.

பாரம்பரிய சீன உணவுக்குப் பிறகு, அழைத்துச் செல்லப்படும் இரவு நேர படகு சவாரி மறக்க முடியாதது. அங்கிருந்து சுற்றி நோட்டமிட்டால் சிங்கப்பூரின் நினைவுச் சின்னமான சிங்கவாயிலிருந்து நீர் பீய்ச்சி அடிக்கும் காட்சி. பிரபலமான 'துரியான்' பழ வடிவில் பிரமாண்ட ஒபேரா ஹவுஸ், வங்கிக் கட்டிடங்கள், அரசு அலுவலகக்

* நினைவுச் சின்னம்...



* சென்டோசா தீவு...



கட்டிடங்கள், மிகப் பெரிய நவீன ஹோட்டல்கள் இப்படி நகரின் ஒட்டுமொத்த அழகை இரவில் ஒளிவெள்ளத்தில் பார்ப்பது, ஏதோ கனவுலகத்தில் சஞ்சரிப்பது போல இருக்கிறது.

செண்டோசா தீவு. அந்தரத்தில் தொங்கும் கேபிள் கார் பெட்டிகளில் ஊர்ந்தபடி இந்தத் தீவை அடைவது அச்சம் தரும் ஒரு த்ரில்லான அனுபவம்! இங்குள்ள கடல்வாழ் உயிரினங்களின் கண்காட்சியைக் கண்டு களிப்பது அற்புதமான ஆனந்தம். கீழிருந்து 350 டிகிரி வட்டத்தில் மெல்லச் சுழன்று உயரத்துக்கு நம்மை எடுத்துச் செல்லும் 'லிஃப்டில்' சென்று, சிங்கப்பூரின் ஒரு பக்க அழகை கீழ்நோக்கிக் கண்டு ரசிக்கலாம். குழந்தைகளைப் போல் குதூகலமாய் வித்தைகள் காட்டி, நம்மை அசத்திய 'டால்ஃபின் ஷோ'வைப் பார்த்தவர்கள் 'ஒன்ஸ்மோர்' கேட்டுக் கைதட்டி ஆர்ப்பரித்தனர்.

'ஜுராங்' பறவைகள் சரணாலயம் - ஐம்பது ஏக்கர் பரப்பளவு - 600 வகைகளில் ஏழாயிரம் பறவைகளுக்கு மேல், சிறகுகளைப் படபடவென அடித்து நம்மை வரவேற்கின்றன. மனிதனால் படைக்கப்பட்ட உலகின் உயர்ந்த 110 அடி உயரமான செயற்கை அருவி. மேலிருந்து பயணிகள் பார்த்து மகிழ ஏதுவாக 'மோனோ' ரயில்கள் ஒற்றைத் தண்டவாளத்தில் தலைக்கு மேல் தடதடத்து ஓடுகின்றன.

**சிங்கப்பூருக்குக் குடிநீர் மலேசியாவிலிருந்துதான் வந்தாக வேண்டும்!**



* முஸ்தஃபா மால்

நான்கு தெருக்களை அடைத்துக் கொண்டு விசுவரூபமெடுத்தது நிற்கிறது நம்மூர் 'முஸ்தஃபா ஷாப்பிங் மால்'. இங்கு கிடைக்காத பொருள் எதுவும் இல்லை. கிட்டத்தட்ட 2000 ஊழியர்கள். தொண்ணூறு சதம் நமது ஊர் நண்பர்கள். 24 மணி நேரமும் இயங்குகிறது.

ஒவ்வொரு ஞாயிறன்றும், முஸ்தஃபா, கடையின் முன்னே கூடி அளவளாவி மகிழ்கிறார்கள். தமிழகத்திலுள்ள தமது வீடுகளுக்கு ஈ-மெயில் மூலம் பணமும், அன்று ஊருக்குத் திரும்பும் நபர்கள் மூலம் கடிதமும், பரிசுப் பொருட்களும் கொடுத்தனுப்புகிறார்கள். தம் சொந்தங்களைக் காப்பாற்ற நாட்டை விட்டு எங்கோ வந்து பாடுபடும் களைப்பும், பிரிவின் வலியும் அவர்கள் முகத்தில் தெரிகின்றன.

உலகிலேயே அதிநவீன படுசுத்தமான அரசு பொது மருத்துவமனை. பார்த்தாலே பரவசம் ஏற்படுகிறது. இன்னும் பல பிரிவுகளில் சிங்கப்பூர் முதலிடத்தைத் தக்கவைத்துக் கொண்டுள்ளது. உண்மைதான், ஆனால் ஒன்று. அங்கிருப்பதைவிட, கன்னியாகுமரி முதல் இமயம் வரை நம்நாட்டில் இல்லாத சுற்றுலா மையங்களா? காணக் கண்கோடி வேண்டும்... பின் ஏன் இப்படி பின்தங்கி... இதற்கும் விடை அவர்களிடமிருந்தே கிடைக்கிறது.

அங்கு இருக்கும் கடுமையான சட்டங்கள். தப்பித்தவறி போதைப் பொருள் கடத்தினால் நிச்சயம் மரணதண்டனைதான். உலகிலேயே அதிகச் சலுகைகளுடன், அதிகச் சம்பளம் பெறும் முதலமைச்சர் சிங்கப்பூர் முதலமைச்சர்தான். அரசுத் துறையில் பணிபுரிபவர்கள், காவல்துறை அதிகாரிகள் போன்றவர்களுக்கும் கை நிறைய சம்பளம், ஏகப்பட்ட சலுகைகளுடன்! பிறகு அவர்கள் ஏன் லஞ்சத்தைப் பற்றி எண்ண வேண்டும்? அனைவருக்கும் கட்டாயக் கல்வி, கல்லூரிகள் ஒவ்வொன்றும் சர்வதேச தரத்தில்! படிப்பு முடிவதற்குள் இரண்டு ஆண்டு கட்டாய இராணுவப் பயிற்சி. பல துறைகளில் தமது நாடு உலகிலேயே முதலிடத்தில் நிலைத்து நிற்க வேண்டுமென்று உண்மையான நாட்டுப் பற்றோடு உழைக்கிறார்கள். மக்களைப் பாதிக்கும் குறைகளென்றால் உடனடியாக அதிரடி நடவடிக்கைகளை அரசு மேற்கொள்கிறது.

இங்கும் இது சாத்தியமாகும். எப்போது?



* தோல்வி மயக்கம்!

# கள்ளை ஆதரிக்கிறாரே ராமதாஸ்?

● வி.விஜய், சென்னை - 4

? ஓரினச் சேர்க்கையைக் குற்றமாகக் கருதி தண்டிக்கும் சட்டப்பிரிவை ரத்து செய்ய மத்திய அரசு தீவிரமாகப் பரிசீலித்து வருகிறதே? இதனால் கலாசார சீரழிவு உண்டாகாதா?

! ஓரினச் சேர்க்கை என்பது மன ரீதியிலோ மருத்துவ ரீதியிலோ சீர்ப்படுத்த முடியாத ஒரு நிலை என்பதைப் பார்க்கும் போது, அனுதாபம் உருவாவது இயல்பு. ஆனால், அதைக் கட்டுப்பாடின்றி அனுமதிப்பதும் தொற்று நோய்கள் பரவ வகை செய்யும். எனவே எச்சரிக்கை தேவை. நன்கு சிந்தித்து, சட்டத்தை ரத்து செய்வதற்குப் பதில், திருத்துவதே சரி.

● கே.சுபாக்கனி,
மேலகிருஷ்ணன்புதூர்

? இன்னும் இரண்டு ஆண்டுகளில் தேசிய அடையாள அட்டை வழங்கப் போகிறார்களாமே?

! ரேஷன் கார்டு, பேன் கார்டு, விசிட்டிங் கார்டு, டிரைவிங் லைசென்ஸ், வாக்காளர் கார்டு, பாஸ்போர்ட், அலுவலக ஐ.கார்ட்... இவ்வளவும் போதாதென்று போலி அடையாள அட்டை தயாரிப்போருக்கு மேலும் ஒன்று!

● பி.ஆர்.மயிலப்பன், ஈரோடு

? வசதி படைத்த குடும்பத்தைச் சேர்ந்த படித்த இளைஞர்களே வழிப்பறி, கொள்ளை போன்ற சம்பவங்களில் ஈடுபடுவது அதிகரித்து வருகிறதே?

* கொம்பு ஜாக்கிரதை!



! காரணங்கள் மூன்று: 1.வசதி படைத்த குடும்பங்களைச் சேர்ந்த இளைஞர்கள் தீய பழக்கங்களுக்கு அடிமையாகி, பெற்றோர் தரும் பணத்தைக் காட்டிலும் கூடுதல் தேவைக்கு உள்ளாவது. 2. அரசியலிலும் ஊடகங்களிலும் இன்று வன்முறை நியாயப்படுத்தப்படுவது. 3. நமது கல்வி முறை ஒழுக்கத்தையும் கட்டுப்பாட்டையும் இளம் வயதிலிருந்தே விதைத்து வளர்க்காதது.

● எம்.அசோக்ராஜா,
திருச்சி-15

? ஆந்திராவில் இரண்டு நீதிபதிகள் வரதட்சணை வழக்கில் கைதாகியிருப்பது எதைக் காட்டுகிறது?

! சட்டங்கள் எவ்வளவு போட்டாலும் சமுதாய மாற்றங்கள் மனித மனங்களிலிருந்து

**நீங்கள் கேட்டவை**



* காத்திருக்கும் கல்வி!



* ஆட்டோ ஆர்டர்!

தான் தொடங்க வேண்டும் என்பது ஒரு புறமிருக்க, 'சட்டம் இருப்பது தெரியாது' என்று சாமானியன் சமாதானம் சொல்லலாம். நீதிபதி தெரிந்து செய்யும் குற்றம்... ஆதலால் கூடுதல் தண்டனை பெற வேண்டும்.

• ஜி.இந்திரா, பெங்களூரு-17

**? முஸ்லிம் மதப் பெண்கள் பர்தா அணிவது மதக் கோட்பாட்டினால் அல்ல; அது அடிமைத்தனத்தின் அடையாளம் என்று ஃபிரெஞ்சு ஜனாதிபதி கூறியிருப்பது சரியா?**

! பயங்கரவாதம் மிகவும் அதிகரித்துவிட்ட இன்றைய சூழலில் மேலை நாடுகளில் பர்தா பற்றிய பயம் அதிகரித்திருப்பதில் அதிசயமில்லை. அதை நேரடியாகச் சொல்லாமல் வேறு சமாதானங்கள் கூறி, பர்தா பழக்கத்தை ஒழித்துக்கட்ட முயற்சி எடுக்கிறார்கள். உண்மையான சமுதாய மாற்றம் வரவேண்டுமானால், அது கற்றறிந்து உயர்ந்துள்ள முஸ்லிம் பெண் குலம் மூலம்தான் வரமுடியும்.

• என்.காளிதாஸ், சிதம்பரம்

**? போக்குவரத்துக் கழகங்களில் ரூ.791 கோடி நஷ்டம் என அமைச்சர் கே.என். நேரு கூறுகிறாரே?**

! நஷ்டம், கழகத்துக்கோ நேருவுக்கோ இல்லை என்பதையும் வரி செலுத்தும் குடிமகன்தான் எல்லா நஷ்டத்தையும் தாங்குகிறான் என்பதையும் உணர்க. இந்த லாஜிக் என்று மக்களுக்குப் புரிகிறதோ, அன்று பஸ் போக்குவரத்து தனியார் துறைக்கு மாறி, நிலைமை சீர்ப்படும். அதுவரை போ.வ.கழகம் க.வ.(கட்டி வராத) கழகம்தான்!

• மா.உலகநாதன், திருநீலக்குடி

**? பாப் இசைச் சக்கரவர்த்தி மைக்கேல் ஜாக்சன் மறைவு...?**

! மிகச் சிறிய வயதில் மிகப் பெரிய வெற்றிகளைப் பெற்றவர். அவருடைய இசையின் முரட்டுத்தனமான உணர்ச்சிப் பெருக்கு, அவரது வாழ்க்கையிலும் வியாபித்து, அவரையே வீழ்த்திவிட்டதுதான் பரிதாபம்.

• எம்.ராஜேந்திரன், லால்குடி

**? தமிழ்நாட்டில் நிறைய சுயநிதி பொறியியல் கல்லூரிகள் அரசியல்வாதிகளின் கையில் இருக்கும்போது, எப்படி நன்கொடை வசூலிக்கக் கூடாது என்று கட்டுப்படுத்த முடியும்?**

! ஒரு கண் துடைப்புக்காகவாவது, வேண்டாத நபர்கள் நடத்தும் கல்லூரிகளில் சோதனைகள் நடத்தி நடவடிக்கை எடுப்பதாக பாவலா காட்ட முடியுமே!



* முரட்டு வாழ்க்கை!

● எம்.எஸ்.கே.அருள்ராஜா,

பெரியதிருக்கோணம் ★

**? ஆட்டோக்களில் அதிக பள்ளிக் குழந்தைகளை ஏற்றிச் சென்றால் கடும் நடவடிக்கை எடுக்கப்படும் என அமைச்சர் நேரு சொல்லியிருப்பது நடைமுறைக்கு ஒத்துவருமா?**

! அச்சுறுத்தலோடு நில்லாமல், ஆக்கபூர்வமாகவும் செயல்பட்டால், நடைமுறைக்கு ஒத்து வரும். அலுவலக நேரங்களிலிருந்து பள்ளி நேரங்களை வித்தியாசப்படுத்தி, பள்ளிச் சிறுவர்களுக்கென்று குறிப்பிட்ட நேரங்களில் அரசுப் பேருந்துகளைச் செலுத்தலாமே!

● பி.ஜெயப்பிரகாஷ், சர்க்கார்பதி

**? ''மத்திய அமைச்சர்னா எனக்கென்ன இரண்டு கொம்பா முளைச்சிருக்கு?'' என்று மு.க.அழகிரி கேட்டுள்ளாரே?**

! அமைச்சர் ஆவதற்கு முன்பே முளைத்த கொம்புகளை, இப்போது அமைச்சரான பிறகு சீவி விட்டு கூர்மைப்படுத்தாமல், வெட்டிவிட்டு மழுங்கடித்தால்தான் அவருக்கும் நாட்டுக்கும் நல்லது.

● உ.குணசீலபாண்டியன்,

ராஜபாளையம்

**? நேற்று வரை மதுவை ஒழிக்க வேண்டும் என்று தீவிரம் காட்டிய பா.ம.க. தலைவர், இன்று 'கள்' இறக்கவும் கள்ளுக்கடைகள் திறக்கவும் ஆதரவு தெரிவித்துள்ளாரே?**

! இது தோல்வியின் விளைவான அச்சத்தில் ஏற்பட்ட மயக்கம். கள் உள்ளிட்ட மது வகைகள் பலவும் ஏற்படுத்தும் மயக்கம் போலவே இதுவும் ஆபத்தானது. தோல்விக்கான காரணங்கள் முற்றிலும் வேறானவை.

● கே.எஸ்.கோவர்த்தனன், சென்னை - 42

**? ராகுலின் 39வது பிறந்த நாளன்று 39 அடி உயர கட் அவுட் வைத்து, 39 குடங்களில் பால் அபிஷேகம், 39 தேங்காய்கள் உடைப்பு! - இது தேவைதானா?**



★ திகைப்பூட்டும் அதிரடி!



★ பர்தாவுக்குத் தடை!

! இப்படிப்பட்ட தனி நபர் வழிபாட்டை ஒழிக்க, ராகுல் காந்திதான் முனைப்புக் காட்டி உட்கட்சித் தேர்தல்கள் நடத்தி, காங்கிரஸ் கட்டமைப்பைப் பலப்படுத்தி கௌரவமூட்ட வேண்டும்.

● ரேவதிப்ரியன், ஈரோடு

**? கல்வித் திட்டத்தில் மாற்றம் கொண்டு வருவதை இன்னும் ஏற்றுக் கொள்ள முடியாதவர்கள்தான் ஏராளம் என கல்வியமைச்சர் தங்கம் தென்னரசு சொல்கிறாரே?**

! கபில் சிபல் போல அதிரடி மாற்றங்களுக்கு அடிபோடாமல், பெற்றோர், கல்வியாளர், மாணவப் பிரதிநிதிகளைக் கலந்தாலோசித்து, சிறுகச் சிறுக மாற்றங்களைக் கொண்டு வந்தால், ஆட்சியில் இருக்கும் ஐந்தாண்டுகளில் எவ்வளவோ சாதிக்கலாம். இப்போது தென்னரசின் உடனடித் தலைவலி, மத்திய அரசு கல்வி மீது போடும் கிடுக்கிப்பிடி. மாநில உரிமைகள் பறிபோகும் - உஷார்!

❒ ரூ.150/- பரிசு பெறுபவர் :

பி.ஆர்.மயிலப்பன், ஈரோடு

★ ரூ.75/- பரிசு பெறுபவர் :

எம்.எஸ்.கே.அருள்ராஜா, பெரியதிருக்கோணம்









இவர் பெயர் எம்.ரஞ்சித். வயது இருபத்தைந்து. ஓவியம் என்பது இவருக்குக் காதலி மாதிரியாம். முறையாக ஓவியம் படிச்சிருக்காரு. ஆனால் ஓவிய இஸங்களில் எல்லாம் பெரிசா மதிப்போ,



# ஓவியக் காதல்!

ஈடுபாடோ கிடையாதாம். பத்து வருஷமா வரைஞ்சுக்கிட்டு இருக்காராம். பாத்துட்டு யாராவது 'சபாஷ்'னு சொன்னா அதுதான் 'பெஸ்ட் வொர்க்'னு சொல்றாரு. ரொம்ப டென்ஷன், கோபம், துக்கம்னு மனசு நிலையில்லாம இருந்தா உடனே ஓவியம் வரைய ஆரம்பிச்சுடுவாராம். அதாவது ஓவியம் ஒரு தியானம்ங்கிறாரு. இயற்கை வரைந்துவிடும் எண்பது வயதுப் பாட்டியின் சுருக்கங்களை விட ஒரு லைன் டிராயிங் ஏதாவது உண்டா என்னன்னு நம்மைக் கேட்கிறாரு இந்த கோவை ஓவியர். விளம்பரப் பலகை ஓவியராகத்தான் தொழில் ஆரம்பிச்சு வாழ்க்கை நடத்திக்கிட்டு இருந்தாராம். கம்ப்யூட்டர் உள்ளே நுழைந்து டிஜிட்டல் போர்டு வந்ததும் வேலை பறிபோயிடுச்சாம். இப்போ இவரும் கம்ப்யூட்டர்ல வரைய பயிற்சி எடுத்துக்கறாராம். இவரோட கனவே, ஓவியத்தை ரசிக்கும் மனைவி வரணும் என்பதுதானாம். வாழ்வில் ஒரு நல்ல ஓவியம் அமைய வாழ்த்தலாமே!

– அமிர்தா

படங்கள் : சின்னராஜ்



• மதன் கார்க்கி

# சினி

ஆந்திராவின் மணி ரத்னம் என அழைக்கப் படும் இயக்குநர் பூரிஜெகன்னாத்திடம், இணை இயக்குநராகப் பணியாற்றிய பி.ரா. இயக் கும் முதல் படம் 'இளமை இதோ இதோ'. இரண்டு ஜோடி நண்பர்கள். இவர்களின் நட்புக்கும், காதலுக்கும் இடையே நடக்கும் போராட்டங்களே படத்தின் மையக் கதை. வைரமுத்துவின் மகன் மதன் கார்க்கி, இந்தப் படத்துக்காக மூன்று பாடல்களை எழுதியுள்ளார். சென்னை அண்ணா பல்கலைக் கழகத்தில் ஆராய்ச்சியாளராக இருக்கும் இவருக்கு இது இரண்டாவது படம். தமிழ், தெலுங்கு என இரண்டு மொழிகளில் தயாராகி வரும் இப்படத்தை அருணை பிக்சர்ஸ் தயாரிக்கிறது. மகாவோ தீவில் படமாக்கப்பட்ட முதல் தமிழ்ப்படம் இதுதானாம்!

நட்புக்கும், நண்பர்களுக்கும் சமர்ப்பிக்கும் வகையில் 'புகைப் படம்' திரைப்படத்தை உருவாக்கி யிருக்கிறார் இயக்குநர் ராஜேஷ் லிங்கம். இவருடைய வகுப்புத் தோழனாக இருந்த என்.சி.மணிகண்டன் படத்தைத்

• 'சர்வம்' படத்தில்...



நியூஸ் பாப்

தயாரிக்கிறார். கல்லூரி வாழ்க்கையை யதார்த்தமாகச் சொல்ல முயன்றிருக்கிறார் இயக்குநர்.

''புகைப்படம் என்பது மந்திரம் போன்ற வார்த்தை. ஒரு போட்டோவை எடுத்துப் பார்த்தால், நாம் இருக்கிற இடத்தை மறந்து, அந்தக் காலகட்டத்தின் நினைவுகளுக்குள்ளே போயிடுவோம். கடந்துபோன வாழ்க்கையும், தொலைந்து போன சந்தோஷங்களும் திரும்பக் கிடைக்க வாய்ப்பே இல்லை. ஃபோட்டோவை வைத்துத்தான் ஞாபகப்படுத்திக்கிறோம். அதனாலதான் அந்தக் கற்பனையான உலகத்துக்கு அழகான ஒரு பேரு புகைப்படம்னு வைச்சேன்'' என்கிறார் இயக்குநர். இவர் செல்வராகவனின் உதவியாளராக இருந்தவர்.



● மீனாட்சி

## சிப்ஸ்

''தமிழ் சினிமாவின் இரண்டு கண்கள் இயக்குநரும் தயாரிப்பாளரும்தான். நடிக்க வருபவர்கள் அவர்களுக்குரிய மரியாதையை அளிக்கத் தவறக் கூடாது. என்னைப் போன்றவர்களை உலகத்துக்குக் காட்டியது அவங்க தானே!'' என்கிறார் நடிகர் ராதாரவி.

நடிகர் சங்கத் தலைவர் இதுவரை இருநூறு கெட்டப்புகளில் விக் வைத்து நடித்திருந்தாலும், இந்த 201-வது வேடம் ரசிகர்களால் வெகுவாக பாராட்டப்படலாம்.

''எப்போதும் எனது படங்களை ஆரம்பிக்கும்போது அதைக் குடும்ப விழாவாகத்தான் தொடங்குவேன். ஏன்னா அடிப்படையில் பத்திரிகையாளனாக இருந்து தயாரிப்பாளராகியவன் நான். தயாரிப்பாளர் சங்கப் பொறுப்பாளராக 2003-ல் பதவியேற்றேன். அச்சமயம் படம் தயாரிப்பதையே நிறுத்தி வைத்திருந்தேன். இப்போது 'சுர்லா'வின் மூலமாக பயணத்தை மீண்டும் தொடங்கியிருக்கேன்'' என்றார் 'அன்புள்ள ரஜினிகாந்த்' உட்பட பல வெற்றிப் படங்களைத் தயாரித்த அழகன் தமிழ்மணி. இதில் தமது மகன் 'அஜய்கிருஷ்ணா'வை கதாநாயகனாக அறிமுகப்படுத்துகிறார் அவர்.

படத்தின் இயக்குநர் சஞ்சய் ராம், 'ஆடுபுலி ஆட்டம்', 'வீரமும் ஈரமும்' போன்ற படங்களை இயக்கியவர். தம்முடைய படங்களின் கதைகளில் மூக்கை நுழைக்காத தயாரிப்பாளர், 'நான் கடவு'ளுக்குப் பிறகு இந்தப் படத்திலும் வித்தியாசமான மனநிலை கொண்ட சௌந்தரபாண்டியன் என்ற மாறுபட்ட கதாபாத்திரத்தில் நடிக்கிறாராம்.

தினா இசையமைக்கும் இந்தப் படத்தில், பாவலர் வரதராஜனின் நண்பரும், பொதுவுடைமையாளருமான கவிஞர் தனபாலன் பாடலாசிரியராகிறார். ●

# உடல்தானம்

**திலகபாமா**



சென்ற வருட தொடக்கத்தில் ஓர் எண்ணம். உடலைத் தானமாக மருத்துவக் கல்லூரிக்குத் தந்து விட வேண்டும் என்று. என்ன செய்ய வேண்டும் என்ற என் கேள்வியை எனக்கு இருந்த மருத்துவச் சூழல் எளிதாக்கித் தருமென நம்பியிருந்தேன். கேள்விகளை என் கணவரிடமிருந்தே துவக்கினேன். ''நிறைய சட்ட விஷயங்கள் இருக்குப்பா. அவ்வளவு எளிதான விஷயமில்லை. மதுரை மருத்துவக் கல்லூரியில் அனாடமி துறையில் கேட்டால் சொல்லுவாங்க'' - அவரது வேலைகளுக்குள் மூழ்கிப் போனார்.

இங்கு இருக்கின்ற கண் தானத்துக்குப் பெருமுயற்சி எடுக்கிற அமைப்புகளைக் கேட்டேன். உற்சாகமான, ''அவசியம் செய்திடுவோம்'' என்கிற பதிலோடு உறைந்து போனார்கள். உள்ளூர் அரசு மருத்துவர் ஒருவரை அணுகிக் கேட்டேன். ''மதுரை செல்லும்போது அதற்கான விண்ணப்பப் படிவம் வாங்கித் தருகிறேன்'' என்று சொன்னார். ஆனால் மூன்று மாதங்கள் ஓடி விட்டன.

மருத்துவக் கல்லூரி மாணவர் எங்கள் மருத்துவமனைக்கு வந்து போகிறவர் என்பதால் அவரையே படிவமும், கூடவே என்னென்ன செய்ய வேண்டும் என்பதையும் பெற்று வரச் சொல்லிக் கேட்க, தொடர்ந்த என் நச்சரிப்பில் படிப்புக்கு நடுவில் எல்லா விவரங்களும் பெற்றுத் தந்தார்.

நான் இன்னார்தான் என நோட்டரி பப்ளிக் கையெழுத்துப் போட்டுத் தர வேண்டும் எனவும், என் குடும்ப அங்கத்தினர்களின் சம்மதமும் வேண்டும் என்றும் சொல்ல, எல்லாமும் எல்லாரையும் தெரிந்த மாதிரி இவ்வளவு நாளும் எனது




பாவலாக்கள் இருந்திருக்கின்றன என்று தோன்றியது. ஒவ்வொரு விஷயத்துக்காக அணுக அணுகத்தான் எதுவுமே நமக்குத் தெரியவில்லை என்று தோன்றியது.

இருபது ரூபாய்க்கான பத்திர பேப்பரில் நான் இன்னார்தான் என்று எழுதி வாங்குவதற்குள்

மூன்று வாரங்கள் ஓடியிருந்தன. அடுத்து அதை எடுத்துக்கொண்டு எல்லாவற்றையும் முடித்து விட்டதாக எண்ணிக் கொண்டு என் கணவர் மற்றும் என்னுடைய ஒப்புதல் கடிதத்தோடும் மதுரை சென்று மருத்துவக் கல்லூரிக்குள் தயக்கத்தோடு அனாடமி துறையைத் தேடிப் போனால், வெறும் மேஜை எனை வரவேற்றது. கல்லூரிக்குப் பரிச்சயமில்லாத என் தயக்கம் கண்டு ஒருவர் விசாரிக்கின்றார். ''என்னப்பா வேணும்?'' ''உடல்தானம் செய்வதற்காகக் கேட்க வந்திருக்கின்றேன்'' என்று சொல்ல, விரைந்து சென்று என்னை நாற்காலி போட்டு அமரச் செய்து, துறை பேராசிரியர்கள் வருவார்கள் என்று சொல்லிவிட்டுச் சென்றார். மருத்துவக் கல்லூரிக்குள் நானே நுழைந்து படிவம் வாங்கியிருக்க இவ்வளவு தயங்கியிருக்க வேண்டியதில்லை என்பது பின்னரே புரிந்தது.

ஊடகங்கள் கொடுத்த புகழாரத்தில் சில பெற்றோர்கள் தங்கள் மூளை வளர்ச்சி இல்லாத குழந்தைகளின் உறுப்புகளை சரியான விவரம் தெரியாது தானமாய் வழங்க முன்வந்திருந்த நேரம்.

சில விஷயங்களுக்கு முறையாகக் கிடைக்கிற புகழ்கூட, அதற்குத் தகுதியில்லாதவர்களையும் அதைச் செய்யத் தூண்டி விடுவது சிக்கலான விஷயம்தான்.

எனவே, சட்ட திட்டங்கள் கடுமையாக்கப்பட்டிருப்பது, தானம் என்ற பேரில்



# சில உறுத்தல்கள்!

இந்த வாசத்துக்குள் என் உடலும் கிடத்தப்பட்டிருக்கும் என்ற நினைப்புடனே அங்கு அமர்ந்திருக்க, வந்து எனது ஆவணங்களைச் சரிபார்த்த பேராசிரியர், ''இது ரொம்ப காலத்துக்கு முந்தைய வழிமுறைகள். இப்ப நிறைய மாத்திட்டாங்க. நிறைய பிரச்னையும் சட்டச் சிக்கலும் வருதுங்கிறதுனால எல்லாவற்றையும் முறையா செய்ய வலியுறுத்துறாங்க'' என்றார்.

நான் சென்றிருந்த நேரம் ஒரு மாணவன் விபத்தில் இறந்து அவனது உடல் உறுப்புக்கள் தானமாக வழங்கப்பட்டதை அடுத்து,

உடல் வியாபாரமாகிவிடக் கூடாது என்ற அரசு நிர்வாகத்தின் பயம். ஏற்கெனவே பெண் உடலைப் பொருளாக்கி விட்ட இந்த வியாபார சமூகத்திடமிருந்து அதை மாற்றிவிடத் தவிக்கும் எனக்கு, ரொம்ப நியாயமான பயமாகத் தோன்றியது.

பேராசிரியர், ''சட்டங்கள் கடுமையான பிறகு இதுவரை ஒரே ஒரு முறையான விண்ணப்பக் கடிதம்தான் எங்கள் கைகளில் இருக்கின்றது. தானம் கொடுக்க விரும்புபவர்கள் வெகு சிலரே. அதிலும் அவர்களே விரும்பினாலும் உறவுகள் விரும்புவதில்லை. அப்படி எல்லாம் விரும்பி வந்தாலும் சட்ட திட்டங்களை முறையாகச்



**சில விஷயங்களுக்கு முறையாகக் கிடைக்கிற புகழ்கூட, அதற்குத் தகுதியில்லாதவர்களையும் செய்யத் தூண்டுகிறது!**

செய்து முடித்து வருபவர்கள் இல்லை'' என்றார். ஏற்கெனவே இருந்த ஒரு நபரின் விண்ணப்பம் மற்றும் ஆவணங்களைப் பார்த்து என்னென்ன ஆவணங்கள் வழங்க வேண்டும் எனக் குறித்துக் கொண்டு மீண்டும் வீடு திரும்பினேன்.

நோட்டரி பப்ளிக் கொடுத்திருந்த நான் இன்னார்தான் எனும் ஆவணத்தை எடுத்துக்கொண்டு, கிராம அதிகாரியைச் சந்தித்தேன். விஷயத்தைச் சொல்லி வாரிசுதாரர் சான்றிதழ் வேண்டும் என்றேன். உயிரோடு இருப்பவர்களுக்கு இதுவரை வாரிசுதாரர் சான்றிதழ் தந்ததில்லை என்றனர். அதனால் அதை எப்படிச் செய்ய வேண்டும் என்று தெரியாது எனத் திருப்பி அனுப்பினர். மீண்டும் மதுரை மருத்துவக் கல்லூரியில் பேராசிரியரைச் சந்தித்து ஏற்கனவே கொடுத்திருந்த நபர் வழங்கியிருந்த வாரிசு சான்றிதழ் எப்படி எழுதப்பட்டிருந்தது என்று பார்த்து எழுதிக்கொண்டு வந்தேன்

மீண்டும் கிராம அதிகாரி அலுவலகப் படையெடுப்பு. அவர், 'கேட்டுச் செய்து வைக்கின்றேன்... போய் வாருங்கள்' என்று அனுப்பி விட்டார்.

அவர் குறிப்பிட்ட இடைவெளிக்குப் பின் திரும்பச் சென்றேன். இதுவரை யாரும் இப்படி எழுதி வாங்காததால், இறப்பதற்கு முன் வழங்க படிவம் எதுவும் இல்லை. எனவே, இது போல டைப் செய்துகொண்டு வாருங்கள் என்று ஒரு கையெழுத்துப் பிரதி கொடுத்து அனுப்பினார். அதைத் தட்டச்சு செய்து நிரப்பி, அவரின் கையெழுத்து வாங்கி, வருவாய் அலுவலர் அலுவலகத்துக்குச் சென்றது அவரது முத்திரை வேண்டும் என்பதற்காக.

அவர், 'கிராம அலுவலக அதிகாரி எழுதிக் கொடுத்தது தவறு. நான் எழுதுவது போல் எழுதிக் கொடுங்கள்' என்று ஒரு மாதிரி படிவம் தயாரித்துக் கொடுக்க, மீண்டும் அதைத் தட்டச்சு செய்து நிரப்பி அவர் கையெழுத்துக்காகக் காத்துக் கிடந்தது படிவம். அவர் முத்திரை கிடைத்ததும் தாசில்தாரின் அலுவலகத்துக்குச் சென்றதும், அவர் இதுவரை எழுதிய படிவங்கள் எல்லாம் தவறு என தானும் ஒரு மாதிரி தயாரித்துக் கொடுக்க, மீண்டும் தட்டச்சு நிரப்புதல், அலுவலகத்தில் அதிகாரிக்காகக் காத்திருத்தல் என்று தொடங்கி கிராம நிர்வாக அதிகாரி, வருவாய் அதிகாரி, தாசில்தார் மூன்று பேருடைய முத்திரையுடன் என் கைவந்தபோது முழுதாக ஆறு மாதங்கள் கடந்து விட்டிருந்தன. இதோடு என் குழந்தைகள், கணவர் ஆகியோரின் ஒப்புதல் கடிதத்தோடும். உடலைத் தானமாக எடுத்துக் கொள்ள யாரும் தடைசொல்ல மாட்டார்கள் என்ற கடிதமும் இணைத்து, மருத்துவக் கல்லூரி வழங்கிய படிவத்தையும் நிரப்பிக்கொண்டு போய், மருத்துவக் கல்லூரியில் துறை பேராசிரியரிடம் சமர்ப்பித்தேன். ''இப்ப என்ன அவசரம் இன்னும் எவ்வளவோ காலம் கிடக்கு. மெதுவா செய்திருக்கலாம்'' என்றார். ''தோணறப்ப செய்திடணும்'' எனும் வார்த்தையோடு எனது பங்கை முடித்து விட்ட திருப்தியில் வீடு வந்து சேர்ந்தேன். ●

கிட்டத்தட்ட ஐந்து மாதங்கள் ரசிகர்களைக் கட்டிப் போட்ட 'எங்கே பிராமணன்?' (ஜெயா டீ.வி) தொடர் கடந்த வாரம் நிறைவடைந்தது. தொடர் குறித்து ரசிகர்களின் விமர்சனத் துளிகள்:



# டிரெண்ட் செட்டர்!



**கிரிஜா :** இந்து மதம் ஒரு பெருங்கடல். அதிலிருந்து ஒரு சில விஷயங்களைத்தான் இந்தத் தொடர் மூலமாகச் சொல்லி இருக்கிறார்கள். மக்கள் தெரிந்து கொள்ள வேண்டிய விஷயங்கள் இன்னும் ஏராளமாக இருக்கின்றன. எனவே, இதன் அடுத்த பாகத்தைப் பார்க்க ஆர்வமாக இருக்கிறோம்.

**லட்சுமி:** வெறுமனே கதையை மட்டும் சொல்லிக் கொண்டு போகாமல், இடையிடையில் சோவிடமே கேள்விகள் கேட்டு, விளக்கமளிக்கச் செய்தது மிகவும் புதுமையாக இருந்தது. சோ அளித்த விளக்கங்கள் மிகவும் யதார்த்தமாகவும், அறிவு பூர்வமாகவும் இருந்தன. டீவி சீரியலில் இது ஒரு டிரெண்ட் செட்டர்.





**கணேஷ் :** கதாநாயகன் அசோக் எவ்வளவு தேடியும், உண்மையான பிராமணனைக் கண்டு பிடிக்க முடியவில்லை. தொடரை அப்படியே முடித்திருக்கலாம். "இது பிடிக்கவில்லையென்றால் இதோ இன்னொரு முடிவு" என்று இரண்டாவது முடிவு கொடுத்திருக்க வேண்டிய அவசியமில்லை.

**பிரகாஷ் :** சென்டிமெண்ட் பிழிய, அழ வைக்கும் தொடர்களிலிருந்து விலகி, உயர்ந்த தளத்துக்குக் கொண்டு போனது. அப்சர், டெல்லிகுமார், கோபி, நீலு எல்லோரும் நன்றாக நடித்தார்கள் என்றாலும், சில கதாபாத்திரங்களுக்குத் தேர்வு செய்யப்பட்ட நடிகர்கள் விஷயத்தில் எனக்கு முழு திருப்தி இல்லை.



- மௌலி

''ஹீய்... ஹு... ஹாய்...'' என்ற சப்தம் நம்மை இழுக்கிறது. கோயம்புத்தூர் புளியவாக்கம் அரசு மைதானம் பக்கமாகச் சென்றால். எட்டிப் பார்த்தால் நண்டு, சிண்டுகள் முதல் கல்லூரி காளை, கன்னியர் வரை தீவிரமாக கராத்தே, ஜூடோ பயிற்சியில் ஈடுபட்டுள்ளார்கள்.

''முதல் முறையா தமிழ்நாட்டுல இருந்து ஸ்ரீலங்காவுக்குப் போன கராத்தே டீம் நாங்கதான். இருபது பேர் போய் தங்கம், வெள்ளின்னு ஐம்பது மெடல்களை அள்ளிட்டு வந்துட்டோம்ல. அடுத்து சிங்கப்பூருக்குப் போறோம். அப்புறம் சீனா... எப்படியும் ஒலிம்பிக்ல தங்கம் வாங்கற வரைக்கும் விடமாட்டோமில்லே'' என்று கோரஸாகச் சொன்னார்கள் அவர்கள்.



# ஃப்ளைட்டில் பறந்த ப்ளாக் பெல்ட்!

சமீபத்தில் இலங்கையில் நடந்த 'இன்டர்நேஷனல் இண்டிகேஷனல் சிட்ரோ கராத்தே, ஜூடோ ஜூனியர் சாம்பியன்ஷிப்' போட்டிகளில் பங்கேற்று அதகளம் செய்து திரும்பியுள்ளார்கள்.

**ரொம்ப இக்கட்டான சூழ்நிலையில அங்கே போய் இருக்கீங்களே. பயமா இல்லையா? அனுபவம் எப்படி?**

''எங்க மாஸ்டர் பக்கபலமா இருந்ததால பயமோ, தயக்கமோ ஏற்படலை. மாறாக இந்தச் சூழ்நிலையையே ஒரு சவாலா எடுத்துக்கிட்டு எப்படியும் ஜெயிச்சே ஆகணும்னு தீர்மானிச்சோம். அதோடு நாங்க தங்கியிருந்த ஹோட்டல்ல தமிழ்ப் பணியாளர்களும், சிங்களப் பணியாளர்களும் ரொம்ப நல்லாவே எங்களைக் கவனிச்சுக்கிட்டாங்க'' என்றார்கள் ஷில்பாவும், சுஜிதாவும்.

நிர்மலா, கல்லூரியில் பி.எஸ்ஸி., படிக்கும் மோனிகா, ''ஆறு மாதத்துக்கு முன் என்னை மாதிரி ஒரு

பயந்தாங்கொள்ளியைப் பார்த்திருக்கவே முடியாது. இந்த கராத்தே டீமில் சேர்ந்த பிறகு எனக்கு ஏற்பட்ட தைரியம் என்னையே



● ஷில்பா

ஆச்சர்யப்பட வைத்தது. இப்ப நானே என் பாஸ்போர்ட் சம்பந்தமாக கலெக்டர், காவல் துறை அதிகாரிகளைத் தனியாகவே போய்ப் பார்க்கிறேன். ஆறு மாதத்தில் ஒரு இன்டர்நேஷனல் வீராங்கனையாக உருவாகி இருக்கேன்னா பாருங்களேன்'' என்றார் பெருமையாக.

இதில் அதிக அளவு பதக்கங்களைப் பெற்று வந்திருக்கும் ஷில்பாவின் எதிர்கால இலட்சியம், ஒலிம்பிக்கில் தங்கப் பதக்கங்களைப் பெற்று இந்தியாவுக்கு, தமிழ்நாட்டுக்குப் பெருமைசேர்ப்பதுதானாம்.

''இந்தப் பயிற்சியில் ஈடுபடுவதால் உடலும், மனமும் சுறுசுறுப்பாகச் செயல்படுகிறது. ஞாபக



● சுஜிதா



● மோனிகா

**"அரசும் வசதியானவர்களும் எங்களுக்கு உதவினால் நிச்சயமாக ஒலிம்பிக் போட்டியில் வெற்றி பெறுவோம்!"**

சக்தி, படிப்பில் ஆர்வம், உள்வாங்கும் திறன் அதிகமாகத் தெரிகிறது'' என்கிறார்கள்.

இங்கே பயிற்சி பெறுபவர்களில் பலர் மாநகராட்சி பள்ளிகளில் படிக்கும் மாணவர்களே. பொருளாதாரத்தில் பின்தங்கியுள்ள இவர்களுக்கு தாயன்போடு உதவுகிறார் பயிற்சியாளர் அருண்.

''ஆயிரக்கணக்கில் ஃபீஸ் கட்டி கற்றுக் கொள்ள நல்ல பயிற்சியாளரைத் தேடி அலையும் இந்தக் காலத்தில்,

எங்க அருண் மாஸ்டர் ஒவ்வொரு மாநகராட்சி பள்ளியையும் தேடிப் போய் அங்கு உடல் வலிமை, விளையாட்டில் ஈடுபாடு கொண்ட மாணவ மாணவிகளைத் தேர்ந்தெடுக்கிறார். தன்னோட சொந்தச் செலவில் கடுமையான பயிற்சிகள் கொடுக்கிறார். ஸ்பான்ஸர் கேட்டு அலைந்து, பற்றாக்குறைக்குத் தன் கையில் இருந்த பணத்தைச் செலவு செய்து எங்கள் குழந்தைகளை இந்த அளவுக்கு உருவாக்குகிறார்'' என்று நன்றியுடன் குறிப்பிடுகிறார்கள் சில


• அருண்

**"வீட்டிலுள்ள பொருட்களை விற்று குழந்தைகளின் கராத்தே பயிற்சிக்குச் செலவிடுகிறோம்!"**

பெற்றோர்கள்.

''அரசாங்கத்திடம் இருந்து இதுவரை எந்த உதவியும் கிடைக்கலை. அருண் மாஸ்டருடைய அக்கறையைப் பார்த்து நாங்களும் அதிகபட்சமாக எங்க சக்திக்கு எவ்வளவு முடியுமோ செய்யறோம். சில சமயம் வீட்டுல உள்ள பொருட்களை விற்று குழந்தைகளுக்காகச் செலவு செய்கிறோம்'' என்கிறார்கள்.

''அரசும், வசதிபடைத்த தனியார்களும் எங்கள் குழந்தைகளுக்கு உதவினால் அடுத்து சைனாவில் நடைபெற உள்ள போட்டிகளிலும் வரப்போகும் ஒலிம்பிக்ஸிலும் நிச்சயமாக வெற்றிவாகை சூடி இந்தியாவுக்குப் பெருமை சேர்ப்பார்கள்'' எனக் கேட்டுக் கொண்டார்கள்.

இத்தனை பெருமைகளுக்கும் பின்புலமாக இருக்கும் அருண் மிகவும் அடக்கத்துடன் புன்சிரிப்புடன் நம்மிடம் பேசினார். ''நான் பெருசா ஒண்ணும் செய்துடலை. வசதியில்லாத காரணத்தால தங்களிடம் உள்ள திறமைகளை அறியாமலே இருக்காங்க இவங்க. அதை வெளியே கொண்டு வந்திருக்கேன். பயிற்சியை ஆரம்பிச்சதும் இவங்க காட்டிய ஆர்வமும், உழைப்பும் என்னை அசர வெச்சது. இவங்களுக்கு சரியான பயிற்சியும், தேவையான வசதியும் செய்து கொடுத்தா நிச்சயம் உலக அளவுல சாதனை செய்வாங்க. தங்கம் வாங்கி ஒலிம்பிக்ஸ் அரங்கில் இந்தியாவைத் தலைநிமிர வைப்பாங்க...''

''மேலே பறக்கிற விமானத்தைப் பார்த்து தரையில கையை ஆட்டறதையே பெருமையா நினைக்கிற எங்களுக்கு, அந்த விமானத்திலேயே பறக்கற வாய்ப்பு கிடைச்சதைப் பத்தி எப்படிச் சொல்றது? இதுக்குக் காரணமான எங்க மாஸ்டருக்கும், இந்த நாட்டுக்கும் புகழ்சேர்ப்பதுதான் எங்க லட்சியம்'' என்று நெகிழ்ச்சியுடன் குறிப்பிட்டார்கள் இந்த வருங்கால வெற்றியாளர்கள்.

**- ஆர்.பாலா**

# இலக்கியச் சங்கமம்

**கவிஞர் பா.தேவேந்திர பூபதியின் கடவு இலக்கிய அமைப்பு... கூடல் சங்கமம் என்ற பெயரில் கவிதை. சிறுகதைகளுக்கான கருத்தரங்கை மதுரையில் இரண்டு நாட்கள் நடத்தியது.**

தமிழகத்தின் பல்வேறு இடங்களிலிருந்து இயக்கம், இஸம், குழு மனப்பான்மை கடந்து ஒருமித்த புள்ளியில், இலக்கியத் திருவிழா போல படைப்பாளிகள் குழுமியது வியப்புக்குரியது.

ச.தமிழ்ச்செல்வன், கு.ஞானசம்பந்தன், சுதிர்செந்தில், பிரபஞ்சன், எஸ்.ராமகிருஷ்ணன், கலாப்ரியா, சுகுமாரன், தமிழ்நதி என இருநூறுக்கும் மேற்பட்ட படைப்பாளிகள் வந்திருந்தனர். ஆறு அமர்வுகளில் படைப்புகள் குறித்து விமர்சிக்க, விவாதிக்க, கைகுலுக்க ஒரு இணக்கமான சூழலை நிகழ்த்திய பூபதியின் 'கடவு' செயல்பாடு இன்னும் நீள வேண்டும் என்பது தித்திக்கிற ஆசைதான்.



### அங்கே சொன்னார்கள்...

★ இன்றைய புதுக்கவிதையில் சொற்களின் வறுமையைப் பார்க்கிறேன். அதற்குக் காரணம் புதியவர்களிடம் வேர்களைப் பற்றிய (பழந்தமிழ் இலக்கிய அறிவு) ஞானம் இல்லை.

**-தொ.பரமசிவம்**

★ குடிபோதை அவதூறுக்கும் வன்முறைக்கும் இட்டுச் செல்கிறது. இலக்கியக் கூட்டங்களில் அதை நிச்சயம் தவிர்க்க வேண்டும்.

**- காலச்சுவடு கண்ணன்**

★ நம்பிக்கையூட்டும் விதமாய் நிறைய பேர் எழுதுகிறார்கள். ஆனால், வாசக மனோநிலை எதிர்வளமாகத் தொழிற்படுகிறது.

**- சுரேஷ்குமார் இந்திரஜித்**

★ ஒரு படைப்பை ஒரு படைப்பாளி விமர்சிக்காமல் தேர்ந்த வாசகன் விமர்சிக்க நாம் வாய்பொத்திக் கேட்கும் சூழல் வர வேண்டும்.

**- பா.வெங்கடேசன்**

★ லட்சக்கணக்கான முஸ்லிம்களை, மலையக மக்களை வெறும் ஐந்நூறு ரூபாய் கொடுத்துத் துரத்திய புலிகள் செயல்பாட்டை நாம் மறந்துவிடக் கூடாது. ஆயினும் சேரியிலிருந்து ஊருக்கு வருவதையே வேற்றுக்கிரகப் பயணம் போல் அமைத்துவிட்ட நாங்கள், காசிஆனந்தன் போல் ஈழ விஷயத்துக்குக் குரல் கொடுக்க இயலாது - வற்றாத கருணை இருந்தாலும்.

**- ஆதவன் தீட்சண்யா**

தொகுப்பு : **சசி**



## வேர் ஓரனம்!



# மனித அதிசயம்!

'இவ்வுலகில் முதல் அதிசயம் ஒன்று இருக்குமானால் அது நிச்சயம் மைக்கேல் ஜாக்சன் தான்' என ஒட்டு மொத்த ஹாலிவுட் நட்சத்திரங் களும் தங்களது பிரத்யேக blogகளில் புகழாரம் சூட்டிக் கொண்டிருக்க, அதற்கு சற்றும் சளைக் காமல் நமது பாலிவுட் வி.ஐ.பி.க்களும் மைக் கேலைப் பற்றி உருகி உருகி எழுதி கொண்டிருக் கின்றனர்.

பிரபல இந்திப்பட இயக்குநர் சுபாஷ் கய், ''மைக்கேல் ஜாக்சன் நெருப்பைப் போன்றவர். உலகில் எந்த மூலைக்கு அவர் சென்றாலும் இளைஞர்கள் கூட்டம் அவரது பின்னாலேயே செல்லும். இந்தியாவும் விதிவிலக்கல்ல. நமது பெரும்பாலான திரைப் படப் பாடல்களிலும், நடன அசைவுகளிலும் அழுத்தமாக அவரது சாயலை நாம் கண்கூடா கப் பார்க்கலாம்'' என்கிறார்.

அமிதாப் பச்சன் தமது blogல் ஜாக்சனின் இசை நிகழ்ச்சியைக் காணச் சென்ற அனுபவத்தைப் பகிர்ந் துள்ளார். ''1980களில், மைக்கேலின் இசை நிகழ்ச்சி ஒன்றை நேரடியாகக் காண ஆசைப்பட்டு ஃப்ளோரிடா சென்றேன். தங்குவதற்கு ஒரு ஹோட்டலில் கூட இடம் கிடைக்காமல் இசை நிகழ்ச்சிக் கான டிக்கெட்டும் கிடைக்காமல், கடைசி யாக எப்படியோ சமாளித்து அந்த இசை நிகழ்ச்சியில் கலந்து கொண்டு கேட்டு ரசித்தேன்'' என்று சிலிர்ப்புடன் நினைவு கூர்ந்துள்ளார் பிக் பி.

சர்ச்சைகளுக்குப் பேர் போன ராம் கோபால் வர்மா தமது blogல் ''நான் மைக் கேல் ஜாக்சனை வெறுக்கிறேன். தாமும் மனித இனத்தைச் சேர்ந்தவர்தான் என தம் மறைவின் மூலம் அவர் வலியுறுத்திய தற்காக அவரை வெறுக்கிறேன். 1996களில் ஒருமுறை அவரது இசை நிகழ்ச்சியைக் காணக் கூடிய அரிய வாய்ப்பு எனக் குக் கிடைத்தது. வேறு ஒரு உலகில் இருந்து வந்தவர் போல இருந்தார். கடவுள் படைத்த பிறவிகளிலேயே மிக மிக அற்புதமான பிறவி அவர்'' என வித்தி யாசமாக எழுதியுள்ளார்.

**- நளினி சம்பத்குமார்**

Registered with the Registrar of Newspaper of India under No. 1041/57 * Registered No. TN / CC (S) DN / 144 / 09 -11 * Licensed to post without prepayment under PMG's Licence No. WPP TN / CC (S) DN / 70 / 09 - 11* Registered as a Newspaper in Srilanka.



## உத்திரவாதமான மேனிப் பராமரிப்பு
## தலைமுறை தலைமுறையாக

50 ஆண்டுகளுக்கும் மேலாக, மேனிப் பராமரிப்பில் சிந்தால் நம்பகமான சோப் என்று தொன்றுதொட்டு பெயர் பெற்றுள்ளது. சிந்தால் சோப் மேனியின் எழிலை மேம்படுத்துகிறது. இதன் ஒப்பற்ற நறுமணம் நாள் முழுவதும் நீடித்து உங்களை புத்துணர்வுடன் வைக்கும். எனவே சிந்தால் பல தலைமுறைகளாக விசுவாசமான வாடிக்கையாளர்களை உருவாக்கியதில் ஆச்சரியமில்லை.




மேனிப் பராமரிப்பு என்றென்றும்